உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.


தொகுதி 12 | பிரபவஞூ சித்திரைமீ கஉ | 1927ஞூ ஏப்ரல்மீ 13உ | பகுதி 10

## கடவுள் வணக்கம்.

இனியே தெமக்குனருள் வருமோ வெனக்கருதி
யேங்குதே நெஞ்ச மையோ
இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்
றெண்ணவோ திடமில்லையே
அனியாய மாயிந்த வுடலைநா னென்றுவரு
மந்தகற் காளாகவோ
ஆடித் திரிந்துநான் கற்றதுங் கேட்டது
மவலமாய்ப் போத லன்றோ
கனியேனும் வறியசெங் காயேனு முதிர்சருகு
கந்தமூ லங்க ளேனும்
கனல்வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்துநான்
கண்மூடி மௌனி யாகித்
தனியே யிருப்பதற் கெண்ணினே னெண்ணமிது
சாமிநீ யறியாததோ
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (1)

நீயேயிங் கெளியேற்குந் தாக மோக
நினைவூடே நின்றுணர்த்தி நிகழ்த்த லாலே
பேயேற்குந் தனக்கெனவோ ரன்பு முண்டோ
பெம்மானே யின்னமன்பு பெருகப் பாராய். (2)

பாராயோ வென்றுயர மெல்லா மையா
பகருமுன்னே தெரியாதோ பாவி யேன்முன்
வாராயோ வின்னமொரு காலா னாலும்
மலர்க்காலென் சென்னிமிசை வைத்தி டாயோ.

## அரும்பொருள் விளக்கம்.

1. இறைவனது திருவருளை யடைதற்குரிய சாதனமொன்றும் தக்க வாறு தேடிக்கொள்ளாததால் நெஞ்சம் வருந்துவதுடன் நோற்றிருந்தார் இன் றில்லையென்னும் பழமொழிப்படி அவ்வருளை யடையுமுன் எங்கே தேகம் நழுவிவிடுகிறதோ வென்றும், அருள் பெறுமையால் அகங்காரம் தலையெடுக் கிறதென்றும், அதனால் கற்றதும் கேட்டதும் பயனடையாமற் போக நேரிடு வது நன்றோவென்றும், உதராக்கினியைத் தணிப்பதற்கு ஏதேனும் அருந்தி, மௌனநிலையிற் பொருந்தி, தனியாயிருக்க எண்ணிய என் எண்ணத்தை நீ யறியாயோவென்றும் இறைவனைநோக்கி ஆசிரியர் முறையிடுகின்றார்.

அவலம்=வீண்.
வறிய=பயனற்ற.
சருகு=உலர்ந்த இலை.
கந்தமூலம்=கிழங்கு.
கனல்வாதை=உதராக்கினியின் துன்பம்.

2. ஆன்மாவுடன் இரண்டறக் கலந்துநின்று ஜீவர்களின் கன்மத்திற்கு ஏற்றபடி நியதி தவறாமல் சகல போகங்களையும் ஊட்டி வைப்பவன் இறை வனேயாகலின், சுதந்தரம் சிறிதும் இல்லாத எளியேனுக்கும் இன்னம் அன்பு பெருகக் கடாக்ஷிப்பாயென்று இறைவனை வேண்டுகிறார்.

நினைவூடே=நினைவினிடத்தே.
நிகழ்த்தல்=நடத்துதல்.
பெம்மானே=இறைவனே.

3. இறைவன் சர்வஞ்ஞனாதலின் 'பகரு முன்னே' என்றும், அவனே மவுனமூர்த்தியாக வெழுந்தருளிவந்து, அனுக்கிரகஞ்செய்து, திருவடி தீக்ஷை முன்னமே செய்திருத்தலால் 'இன்னமொரு காலானாலும் மலர்க்காலென் சென்னிமிசை வைத்திடாயோ' என்றும் கூறுகிறார்.

துயரம்=துன்பம்.
பகர்தல்=சொல்லுதல்.
சென்னிமிசை=தலையின்மேல்.

---

# ஆனந்தபோதினி

பிரபவஸ்ரீ சித்திரைமீ கவ

## எதிர்கொண்டு இடர்செய்வோர்.

சென்னையில் சில கிளப்புக்காரர்கள் இருக்கின்றார்கள். இவர்களுள் பெரும்பாலார் தென்னாட்டுக்காரர்கள்; உள்ளூர்க்காரர் சிலரே யிருக்கின்றனர். கிளப்புகள் ஆகாரம் விற்பதற்கு ஏற்படுவனவெனினும், இவர்கள் வைத்திருக்கும் கிளப்புகள் வெளியூர்க் காரர்களை ஏமாற்றுவதற்கே. மனிதர்களுக்குள் ஊர் அபிமானமும், நாட்டபிமானமும் ஏற்படுவது இயற்கை; ஒரு நாட்டினர், தங்கள் நாட்டாரிடத்தில் நம்பிக்கைகொள்வர்; ஒரு ஊர்க்காரர் தம்முடைய ஊரினரிடத்தில் நம்பிக்கை வைப்பர். ஆதலின், ரெங்கோன், பினாங்கு, சிங்கப்பூர் முதலிய இடங்களுக்குச் செல்லமிகுதியும் வருவோர் தென்னாட்டுக்காரர்களே யாதலின், அவர்களுக்கு நம்பிக்கையுண்டாக்கி அவர்களைத் தங்கள் மாயவலைக்குள் இழுப்பது சுலபமாய் முடியுமென்னும் எண்ணத்துடன் அந்நாட்டுக்காரர்களே இந்தக் கிளப்புத்தொழிலை மேற்கொண்டிருக்கின்றனர். இவர்களுடன், நன்னெறியைக் கடைப்பிடித்தொழுகும் வகுப்பினராகிய செட்டிப்பிள்ளைகள் சிலரும் சேர்ந்திருக்கின்றனர். எக்காலத்தும் நல்ல ஆசாரத்தோடிருக்கும் இவர்களும் இதில் சேர்ந்தது வியப்பினும் வியப்பே!

இவர்கள் ரெங்கோன் கப்பல் பிரயாணமாகும் சமயங்களில் இரண்டு தினங்களுக்கு முன்னரே தெற்கேயிருந்து ரெயில் வரும் நேரங்களிலெல்லாம் கூட்டம் கூட்டமாக எழும்பூர் ஸ்டேஷன் போய்ச் சேருகிறார்கள். மனிதர்கள் பிளாட்பாரம் டிக்கட்டுகள் வாங்கிக்கொண்டுதான் உள்ளே போகவேண்டுமென்னும் ரெயில்வே சட்டம் வெகு கண்டிப்பாயிருந்தபோதிலும் இவர்களுக்குமாத்திரம்

அது கிடையாது. கேட்டில் நிற்பவர்கள் இவர்களால் மிகுதியும் சட்டைப்பையை நிரப்பக்கூடியவர்களா யிருப்பதால் இவர்களைத் தாராளமாக உள்ளே விட்டுவிடுகிறார்கள்; இவர்கள் டிக்கட்டில்லாமல் உள்ளே செல்வதுமல்லாமல் செங்கல்பட்டு வரையிலும் ரெயிலில் போயும் திரும்புகிறார்கள்.

இவர்கள் தென்னாட்டுக்காரர்களைக் கண்டவுடன் பலாப் பழத்தை ஈக்கள் மொய்த்துக்கொள்வதுபோல் மொய்த்துக்கொள்கிறார்கள். அவர்கள் முன் எப்போதுமே பழக்கமில்லாதவர்களா யிருந்தபோதிலும், நெடுநாட் பழக்கமுடையவர்களைப்போல், "அண்ணாச்சி ! வாருங்கள் ! வாருங்கள் !! நீங்கள் முந்தின பயணம் வந்துபோய் அதிகநாளாச்சே; அப்போது நம்மள் கிளப்பில்தானே தங்கியிருந்துபோனீர்கள்; ஆத்தா சுகமா? அக்கா க்ஷேமந்தானா? ஒரு கடுதாசிகூட எழுத மறந்துவிட்டீர்களே; வாருங்கள் வீட்டிற்குப் போகலாம்" என்று அவர்கள் கையைப்பிடித்திழுக்கிறார்கள். இப்படியே ஒரு மனிதனை ஏழெட்டுப்பேர், "எங்கள் கிளப்புக்கு வாருங்கள்! எங்கள் விடுதிக்கு வாருங்கள்" என்று நாலா பக்கங்களிலும் பிடித்திழுக்கிறார்கள்; சிலர் வந்த மனிதர்களுடைய மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு, 'வண்டிக்கு வாருங்கள்! வாருங்கள் !!' என்று ஒரு பக்கத்தில் விரைந்து செல்கிறார்கள்; இவர்களோடு கூட்டாளிகளாகிய போர்ட்டர்கள் பிரயாணிகளுடைய அனுமதியில்லாமலே சில மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு, "சாமி வண்டியில் கொண்டுபோய் வைக்கிறேன்; வாருங்கள்" என்று மற்றொரு பக்கத்தில் ஓடுகிறார்கள்; சில போக்கிரிகளாகிய வண்டிக்காரர்கள் வந்து சில மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு, "அண்ணாச்சி! முத்துக்கருப்ப பிள்ளை கிளப்புக்குத்தானே போகிறீர்கள்; பகவதியா பிள்ளை கிளப்புக்குத்தானே போகிறீர்கள்? நான் கொண்டுபோய் விடுகிறேன் வாருங்கள்" என்று அவர்களுடைய கையைப் பிடித்திழுக்கிறார்கள்.

இப்படி இவர்கள் கூடிக் கலக்கஞ் செய்வதால் பிரயாணிகளுடைய மூட்டை முடிச்சுகள் ஒரு பக்கம் போய்விடுகின்றன; பெண்டு பிள்ளைகள் ஒருபக்கம் பிரிந்துபோய்க் கலங்குகிறார்கள். மூட்டைகளிற் சில தவறியும் போய்விடுகின்றன. இப்படிப் பலவித கலக்கங்களையும் அடைந்து பிரயாணிகள், நாலா பக்கங்களிலும் இழுக்கும் பல கிளப்புக்காரரில் முடிவாகப் பொறிகலங்கி ஒருவர் வசப்படுகிறார்கள். இதற்குள் அவர்கள் அந்தக் கிளப்புக்

காரர் கூட்டத்தில் அகப்பட்டதால், புலிக்கூட்டத்தினிடையே அகப்பட்ட ஆட்டுக்குட்டிகளைப்போல் படாதபாடுபட்டுச் சுழன்று தளர்ந்துபோகிறார்கள்.

இவ்வாறு கிளப்புக்காரர்கள் பலவகையிலும் அவர்களை மயங்கவைத்துத் தங்கள் தங்கள் விடுதிகளில் கொண்டுபோய்ச் சேர்க்கிறார்கள். இவ்வாறு கொண்டுபோய்ச் சேர்த்துக்கொண்டவுடன், அவர்கள் தங்கியிருக்கும் நாட்களுக்கு, ஒரு நாளைக்கு, ஒரு ஆளுக்கு இடவாடகை கால்ரூபா விகிதமும், சாப்பாட்டுக்கு வேளையொன்றுக்கு ஆறணு விகிதமும், கப்பல் டிக்கட் வாங்கிக் கொடுப்பதற்கு டிக்கட் ஒன்றுக்கு நான்கணு விகிதமும் அவர்களிடம் பணம் வசூலித்துக்கொண்டு அவர்களைக் கப்பலுக்கனுப்பிவிடுகிறார்கள். இத்தகைய வரும்படி தேடுவதற்கே இந்தக் கிளப்புக்காரர்கள் ரெயிலுக்குப் போய்ப் பிரயாணிகளைச் சேர்த்துக்கொண்டு வருகிறார்கள். ஆட்கள் அதிகரிப்பதற்குத் தக்கபடி இவர்களுக்கு வருமானமும் அதிகரிக்குமாதலால் கூட்டம் சேர்ப்பதில் இவர்கள் மிகுந்த முயற்சி யெடுத்துக்கொள்வார்கள். இவர்கள் இவ்வாறு பிரயாணிகளிடம் பணம்பறித்தாலும் அவர்களுக்கு எவ்வித சௌகரியமுஞ் செய்வதில்லை. இவர்கள் அவர்களுக்குப் போடும் சாப்பாட்டை நினைத்தாலும் வாந்திவரும்; வாசஞ் செய்வதற்கு விடும் இடமோ எருமைத் தொழுவத்திலும் கேவலமாயிருக்கும். பிரயாணிகள் இவர்கள் கையில் அகப்பட்டு மீண்டுபோகும் வரையில் பெருங் கலக்கங்களையும் துன்பங்களையுமே அடைவர். இவர்கள் இவ்வாறு வருவோரை வலிந்திழுத்துத் துன்பப்படுத்தாமல் தங்களிடம் விரும்பி வருவோரை மாத்திரம் சாந்தமாக அழைத்துக்கொண்டுபோய் அவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து நியாயமாக வாங்கக்கூடியதை அவர்களிடம் வாங்கிக்கொண்டு அனுப்பினுல் மெத்த அனுகூலமாயிருக்கும். அப்படியின்றிப் பிரயாணிகளுக்கு இவர்கள் நலஞ்செய்வார்போல் நடித்து இவ்வாறு துன்பஞ் செய்வது பெரிய அக்கிரமமா யிருக்கிறது.

இந்த அக்கிரமக்காரர்கள் இங்ஙனம் கப்பல் பிரயாணிகளுக்கு அல்லல் புரிவதுமல்லாமல், சில சமயங்களில் வேறு மனிதர்களையும் அத்தகைய பிரயாணிகளென்று நினைத்து அவர்களையும் எழும்பூர் ஸ்டேஷனில் சூழ்ந்துகொண்டு துன்புறுத்துகின்றனர். நம்முடைய காரியாலயத்திலுள்ள முக்கியஸ்தர் ஒருவர் குடும்பத்

துடன் வெளியூருக்குப்போய்த் திரும்பிவந்து எழும்பூரில் இறங்கிய போது, இந்த 'எதிர்கொண்டு இடர் செய்வோ' ரிடம் அகப்பட்டுக்கொண்டு படாத பாடெல்லாம் பட்டுவந்திருக்கிறார். அவர் மனைவி மக்களுடன் வந்து இறங்கியவுடன், அவரைக் கப்பலுக்குப் போகிற தென்னாட்டினரென்று கிளப்புக்காரர்கள் நினைத்து நெருங்கிச் சூழ்ந்துகொண்டு, "எங்களின் கிளப்புக்கு வாருங்கள்; எங்கள் விடுதிக்கு வாருங்கள்" என்று நாலா பக்கங்களிலும் இழுத்தார்களாம்; அவர்களோடு சேர்ந்த சில வண்டிக்காரர்கள் அவருடைய மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு வேறு பக்கங்களில் ஓடினார்களாம். அவர், 'நான் உள்ளூர்க்காரன், என்னைத் தொந்தரவு செய்யாமல் விட்டுவிடுங்கள்' என்று எவ்வளவோ சொல்லியும் அவர்கள் கேட்கவில்லையாம்; முடிவில் அவர் சினந்து பேச அவர்கள் அவருடன் சண்டை தொடுத்தார்களாம்; மூட்டைகளை எடுத்துக்கொண்டோடிய வண்டிக்காரனைத் தடுத்ததில் அவனும் சண்டைபோட ஆரம்பித்துவிட்டானாம்; அவர் இவர்களுடைய தொந்தரவினின்றும் விடுபட்டு ஒரு வாடகை வண்டி அமர்த்தி அதில் மனைவி மக்களுடன் அமர்வதற்கு ஒருமணிநேர மாயிற்றாம். அவர், தமிழ் விற்பத்தியும் புத்தகம் வரையும் ஆற்றலுமுடையவர்; ஆதலின், "நம்மையே இந்தப் பாடுபடுத்தும் இவர்கள் நாட்டுப்புறங்களிலிருந்துவரும் ஏழைப்பிரயாணிகளை என்னபாடு படுத்தமாட்டார்கள்" என்று அதிசயித்து மறுநாளே நம் ஆபீசுக்கு வந்தவுடன் இக்கிளப்புக்காரரின் கொடுஞ்செயல்களை நம்மிடம் தெரிவித்துப் பத்திரிகையில் வெளிப்படுத்தும்படி கேட்டுக்கொண்டார்.

இவ்வாறு கிளப்புக்காரராலும், வண்டிக்காரராலும், போர்ட்டர்களாலும் எழும்பூர் ஸ்டேஷனில் தினந்தோறும் எண்ணிறந்த அக்கிரமங்கள் நடந்துவருகின்றன. இவற்றைப்பற்றி நம் போதினியில் முன்னொருமுறை "கீழ்நாட்டுப் பிரயாணிகளின் கஷ்டம்" என்ற தலைப்பின்கீழ் விரித்தெழுதி யிருக்கிறோம். எனினும் இத்துன்பங்களை நீக்க எவரும் முயற்சி யெடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. ஸ்டேஷன்மாஸ்டர், பிளாட்பாரம் இன்ஸ்பெக்டர், ரெயில்வே போலீஸார் முதலியவர்கள் இவற்றைக் கவனிக்க கடமைப்பட்டிருக்கிறார்கள். இனியேனும் இவர்கள் கவனித்து இவ்விடையூறுகளைத் தீர்த்துப் புண்ணியத்தைக் கைக்கொள்ள முயற்சி எடுத்துக்கொள்வாராக.

ஓம் தத் ஸத்.

## 13-வது ஆண்டு.

நேயர்களே! இந்தப் பிரபவஹு அடுத்த ஆடிமீ கூ (16—7—27) நம் ஆனந்தபோதினிக்கு 13-வது ஆண்டு பிறக்கப்போகிறது. ஆதலின் சந்தா நேயர்கள் ஷை 13-வது ஆண்டின் சந்தாத் தொகையை அடுத்த ஆனிமீ கூ (15—6—27) க்குள், மணியார்டர் மூலமாகவோ, நேரிலோ நமக்கு வந்து சேரும்படி அனுப்பிவிடக் கோருகிறோம். பத்திரிகை வேண்டாதவர்கள் ஷை 15—6—27 க்குள் நமக்குக் கார்டின்மூலம் அவ்விவரத்தைத் தெரிவித்துவிடவேண்டும். மேற்கூறியபடி சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பிவிடுகிறவர்களுக்கு அடுத்த ஆனி மாத சஞ்சிகையும், பிரபவ வருட சஞ்சிகைகளும் சாதாரண போஸ்டில் அனுப்பப்பட்டுவரும். பத்திரிகை வேண்டாமென்று தெரிவித்தவர்களுக்கு அடுத்த ஆனி மாத சஞ்சிகை மட்டும் சாதாரண போஸ்டில் வந்துவிடும். மேற்கூறியபடி சந்தாத் தொகையை அனுப்பாதவர்களுக்கும், பத்திரிகை தங்களுக்குத் தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காதவர்களுக்கும், அடுத்த 13-வது ஆண்டின் சந்தாவுக்கு அடுத்த ஆனி மாத பத்திரிகை வி.பி.யி லனுப்பப்படும். இவர்கள் தங்களுக்குப் பத்திரிகை வேண்டாமென்ற விவரத்தைத் தெரிவிக்காமலிருப்பதாலும் சந்தாத் தொகையை அனுப்பாமலிருப்பதாலும் பத்திரிகையை வி.பி. யில் பெற்றுக்கொள்ள இஷ்டமுடையவர்களா யிருக்கிறார்களென்றே நாம் நம்பி இவர்களுக்கு வி.பி. யனுப்புவதால் இத்தகைய நண்பர்கள் வி.பி. யைத் திருப்பிவிடாமல் பெற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறோம். இங்ஙனம் வி.பி. யை ஏற்றுக்கொள்கிறவர்களுக்கும் பிரபவஹு சஞ்சிகைகள் மாதந்தோறும் வழக்கம்போல் அனுப்பப்பட்டுவரும். வி.பி. யில் 3-அணு அதிகச் செலவும், பத்திரிகைவந்து சேர்வதற்கு வீண்காலதாமதமும் நேர்வதால் பெரும்பாலும் முன்பண மனுப்பிவிடுவதே நலமென்பதை நேயர்கள் கவனிக்கவேண்டும்.

இங்ஙனம் முன்பண மனுப்பாமலும், பத்திரிகை தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காமலும் இருந்துவிட்டு வி.பி. வரும்போதும் அதைப் பெற்றுக்கொள்ளாமல் திருப்பிவிடுகிறவர்களுக்கு முன்சந்தாவுக்குச் சேர வேண்டிய ஆனிமீ பத்திரிகை சேராமல் திரும்பிவிடுவதோடு, நமக்கும் வீணுகப் போஸ்டேஜ் நஷ்டமுண்டாகிறது. ஆதலால் நண்பர்கள் மேற்கூறிய விஷயங்களைக் கவனித்து நடந்துகொள்ளும்படி வற்புறுத்திக் கூறுகிறோம்.

சந்தாதாரர்களுக்கும், நமக்கும் வீண்கஷ்டமும் நஷ்டமும் உண்டாகாதிருக்கும்பொருட்டே நாம் புதுவருடம் பிறப்பதற்கு இரண்டுமாதங்களுக்கு முந்தியே இவ்விஷயங்களைத் தெரிவிக்கிறோம். இப்படித் தெரிவித்தும், சில நண்பர்கள் இவ்விஷயங்களைக் கவனித்து முன்பண மனுப்பாமலும், பத்திரிகை தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காமலு மிருந்துவிட்டு வி.பி. போகும்போது அதைத் திருப்பி நமக்கு நஷ்டத்தை உண்டாக்கிவிட்டுத் தங்களுக்கு ஆனி மாதம் சஞ்சிகைவந்து சேரவில்லையென்று நம்மீது

குறை கூறுகின்றனர்கள். சிலர், இந்த அறிவிப்பைப் பார்த்திருந்தும் பேசாம லிருந்து வி.பி. யைத் திருப்பிவிட்டு, "நாங்கள் பேசாமலிருப்பதே பத்திரிகை தேவையில்லையென்பதற் கறிகுறி; அதைப்பற்றி நாங்கள் அரையணு செலவுசெய்து கார்டின்மூலம் தெரிவிக்கவேண்டியதில்லை; நீங்கள் ஏன் எங்களுக்குக் கார்டு எழுதித் தெரிவித்து எங்கள் சம்மதத்தைக்கேட்டுத் தெரிந்துகொண்டு வி.பி. யனுப்பலாகாது? ஆதலால் நீங்கள் வி.பி. யனுப்பி எங்களுக்கு ஆனிமாதம் சஞ்சிகைசேராமல் திரும்பிவிடும்படி செய்தது நியாயமாகாது" என்று குதர்க்கமான லெட்டர்கள் எழுதுகிறார்கள்.

நண்பர்களே! இதற்றில் நீங்கள் சில விஷயங்களைக் கவனிக்கவேண்டும். இந்த அறிவிப்பை நாங்கள் இரண்டுமாதங்களில் வெளிப்படுத்தியும், முன்பண மனுப்பாமலும், பத்திரிகை தேவையில்லை யென்பதைத் தெரிவிக்காமலு மிருப்பவர்கள் நிச்சயமாக வி. பி. பெற்றுக்கொள்ள இஷ்டமுள்ளவர்களென்றே எங்களால் கருதப்படுகிறார்கள். அவர்கள் ஏதோ அசந்தர்ப்பத்தால் முன்பண மனுப்பமுடியாம லிருந்துவிட்டார்கள் என்று கருதியே நாங்கள் அவர்களுக்கு வி.பி. யனுப்புகிறோம். சிலர் குதர்க்கமாய் லெட்டர் எழுதுகிறபடி இவர்களெல்லோரையும் பத்திரிகை வேண்டாதவர்களென்று நாம் எப்படிக் கருதிவிடமுடியும்? இவர்களுள் சிலரே, கவனியாமையாலோ, வீண் குதர்க்க புத்தியாலோ இந்த அறிவிப்பின்படி நடப்பதைவிட்டுப் பத்திரிகை வேண்டாமென்னும் எண்ணத்தை மனதில் வைத்துக்கொண்டிருந்து வி. பி. வந்ததும் திருப்பிவிடக்கூடியவர்களா யிருப்பார்கள். இவர்களை நாம் எப்படிக் கண்டுகொள்ள முடியும்? அப்படித் தெரிந்துகொள்ளவேண்டுமென்றால் முன்பண மனுப்பாத எல்லோருக்குமே கார்டனுப்பி வி.பி. அனுப்பலாமா அனுப்பக்கூடாதா என்ற விவரத்தை ஒவ்வொருவரிடத்தும் கேட்கவேண்டும். சிலர் செய்கையை முன்னிட்டு அதிகப் பணம் செலவிட்டு எல்லோருக்கும் கார்டனுப்ப முடியுமா? பத்திரிகை வேண்டாதவர்கள் சிலரே இருப்பார்கள். அவர்கள் அவ்விவரத்தை அரையணுக் கார்டில் தெரிவித்துவிடுவது சுலபம். அதனால் இருவகையாருக்கும் தொந்தரவிராது. நாம் எல்லோரிடத்தும் கார்டனுப்பி வி. பி. யனுப்ப அபிப்பிராயம் கேட்பதென்றால் அதிகப் பணச் செலவும் வீண் தொந்தரவு முண்டாகும். இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்து பாராமல் சிலர் குதர்க்கமான லெட்டர் எழுதுவது எவ்வளவு பொருத்தமானதென்பது அறிவுடையார்க்கு விளங்கும்.

ஆதலின், நேயர்கள் இந்த அறிவிப்பின் விஷயங்களைக் கவனித்துச் செய்யுமாறு மிகவும் மீண்டும் வற்புறுத்திக் கூறுகிறோம். பத்திரிகை தேவையில்லாத நண்பர்களும் வீண் குதர்க்கமும், நியாய விரோதமும் செய்வதைவிடுத்து அவ்விவரத்தைக் கார்டின்மூலம் மேற்குறித்த காலத்திற்குள் தயவுடன் தெரிவித்துவிடும்படி கேட்டுக் கொள்கிறோம்.

பினுங், சிங்கப்பூர் முதலிய மலேயா நாடுகளுக்கு வி பி. இல்லையாதலின் அங்குள்ள சந்தாதாரர்கள் எல்லோருமே முன்பணம் அனுப்பிவிடவேண்டும்.

முன்பண மனுப்புவோர் பழய சந்தாதாரர்களாயிருந்தால் தங்கள் சந்தா நம்பரைக் குறிப்பிட்டு அடுத்த 13-ஆம் ஆண்டுக்கு என்று எழுதி யனுப்ப வேண்டும். புதிதாய்ச் சேருகிறவர்கள் புதிய ஆண்டுக்கு என்று எழுதவேண்டும். சந்தா நெம்பர் ஒவ்வொருமாதத்திலும் வரும் சஞ்சிகையின் மேல்உறையில் இருக்கும். அதைத் தெரிந்து எழுதவும். (1190) என்ற ரிஜிஸ்டர் நெம்பருமிருக்கும். அதை யெழுதிவிடாமல் சந்தா நெம்பர் என்று போட்டிருப்பதைப் பார்த்து எழுதவும். சந்தாநெம்பர் தெரியாதவர்கள் முன்பண மனுப்பாமல் வி.பி.யிலேயே சஞ்சிகை பெற்றுக்கொள்வது நலம்.

சஞ்சிகையை நிறுத்திவிட எழுதுவோரும் ஷை சந்தா நெம்பரைக் குறித்தெழுதவேண்டும். . ப-ர்.

# தேசநலப் பகுதி.

## தாதாபாய் நௌரோஜி.

இந்திய ஜன சமூகத்தில் 'தேசசேவை'—'தேசபக்தி' யின் உணர்ச்சி தோன்றுவதற்குக் காரணராய் நின்றவர் **தாதாபாய்** நௌரோஜியேயாம்.

### பிறப்பும் பால்யமும்.

தாதாபாய் நௌரோஜி 1825-ம் ஆண்டு செப்டம்பர்ீ 4-ந் தேதி பம்பாய் நகரத்தில் வதிந்த ஓர் பார்சியின் குமாரராய்த் தோன்றினர். 'தந்தையொடு கல்விபோம்' என்பதற்கிணங்க கல்வியூட்டுந் தன்மையையுடைய தந்தையை இவர் தம் நான்காம் பிராயத்தி லிழந்துவிட்டார். கணவனையிழந்து கைம்பெண்ணாகிய இவருடைய தாய், தம் சகோதரர்களின் ஆதரவிலிருந்து வந்தார். தாதாபாய் நௌரோஜியும் தம் தாய்மாமனின் உதவியால் கல்வி பயின்று வந்தார். சிறுபள்ளிக்கூடங்களில் படித்துத் தேர்ந்து பின்பு, பம்பாய் நகரிலுள்ள எலிபின்ஸ்டன் உயர்தரக்கலாசாலையிற் சேர்ந்து வாசித்தார். விளையும் பயிர் முளையிலே தெரியுமென்பதுபோல, தாதாபாய் பரீக்ஷைகளில் முதன்மையாகத் தேர்ந்து பல பரிசுகளும், நன்கொடைகளும் பெற்று உபாத்தியாயர்களாற் பெரிதும் அபிமானிக்கப்பட்டு வந்தார். 1845-ம் வருஷம் படிப்பு முடிவடைந்து நௌரோஜி பட்டமும் பெற்றார்:

பொதுக்கல்வி முடிவடைந்தபின்னர், பம்பாய்நகர முதன்மை நியாயாதிபதியும், கல்வி இலாகா அக்ராசனருமான சர் எர்ஸ்கின் பேர்ரி என்பவர் தாதாபாயின் அறிவு ஆற்றல்களைக்கண்டு வியந்து நௌரோஜியை பாரிஸ்டர் பரீக்ஷைக்கு வாசிப்பதற்காகச் சீமைக்கு அனுப்ப எண்ணினர். அதற்கான செலவில் பாதியைத் தாதாபாயின் மாமன் கொடுத்துதவச் சம்மதிக்க, ஸர் எர்ஸ்கின்பெர்ரி தாம் பாதிச்செலவை ஏற்றுக்கொள்ள ஒப்பினர். ஆனல், இதற்குச் சில வருஷங்களுக்கு முன்னர் கல்விபெறும் நோக்கத்துடன்

சீமைக்குச் சென்று ஞான ஸ்நானம் பெற்றுக் கிரிஸ்தவராகித் திரும்பிவந்தனர் பல இந்தியமாணவர். தாதாபாயின் தாய் மாமன் இம்மாணவர்களின் மாறுதலைக் கண்டுபயந்து "தாதாபாயும் கிரிஸ்தவவேடத்துடன் இந்தியாவுக்குத் திரும்பிவந்தாலென்ன செய்வ" தென்ற பயங்கொண்டு நௌரோஜியைச் சீமைக்குச் செல்ல அனுமதிக்கவில்லை. இக்காரணத்தால் நௌரோஜியின் சீமைப்பிரயாணம் தடையுற்றது. சீமைக்குச் செல்லும் எண்ணம் ஈடேருததால் தாதாபாய் உத்தியோகம் சம்பாதிக்க முயன்ருர். உடனே இவருக்கு பம்பாய் எலிபின்ஸ்டன் கலாசாலையிலோர்

## உபாத்தியாயர்

பதவி கிடைத்தது. அக்கலாசாலையில் தாதாபாய் அதிக ஊக்கங்கொண்டு, மாணவர்களுக்குக் கல்விபோதிப்பதில் அதிக சாமார்த்தியராக விருந்தது கண்டு, கலாசாலைத்தலைவர்கள் இவருக்கு 1854-ம் ஆண்டில் 'கணிதசாஸ்திரம்' 'பிரகிருதிசாஸ்திரம்' முதலியன போதிக்கும் உயர்தர ஆசிரியர் பதவியை அளித்தனர். இந்தியர்களுக்கு எலிபின்ஸ்டன் கலாசாலையில் போதகாசிரியர் பதவியைக் கொடுப்பது வழக்கமில்லாதிருந்தபோதிலும் விசேஷமாக இவரை அவ்வேலையிலமர்த்தியதினின்றும் இவருடைய திறமைவிளங்கும்.

கலாசாலை மாணவர்களின் ஒத்துழைப்பைக்கொண்டு தாதாபாய் 'இலக்கிய சங்க' மொன்றை அக்கலாசாலையி லேற்படுத்தினர்; அச்சங்கத்தின் கொள்கைகளையும், அதன்சார்பாக நடைபெறும் சொற்பொழிவுகளையும் வெளியிட ஓர் பத்திரிகையும் தோன்றச்செய்து அதற்கு விஷயதானங்கள் செய்துவந்தார். இயற்கையாக நௌரோஜிக்குப் 'பெண்கல்வி' யில் அதிக ஊக்க முண்டு; பெண்களுக்குக் கல்வியவஸ்யமென்ற கருத்துக்கள் பொதிந்த பல வியாசங்களை இவர் சஞ்சிகைகளுக்கு எழுதிவந்தார்; இவருடைய முயற்சியின் காரணமாகப் பம்பாய் நகரில் பல பெண்பாடசாலைகள் நிறுவப்பெற்றன. நௌரோஜியே அவகாசம் கிடைத்தபோது அப்பெண்பாடசாலைகளுக்குச் சென்று கல்வி போதிப்பது முண்டு; தாதாபாயே பம்பாய் மாகாணத்தில் முதல் முதலாக பெண்கல்வி யுணர்ச்சியை யுண்டுபண்ணினரெனினும் மிகையாகாது. கலாசாலையைப் பொறுத்தவிஷயங்களில் மட்டுமல்லாது பொது ஸ்தாபனங்களிலும், தேசகைங்கர்யத்திலும் நௌரோஜி அதிகம் ஈடுபட்டு "பம்பாய் சங்கம்" (Bombay Association), விதவா விவாஹசபை, பார்லி தேசாப்பியாச அகம்—அனைய பல ஸ்தாபனங்களின் உறுப்பினராகவுமிருந்து வந்தார். பின்பு, தேசமுன்னேற்றத்திற்கு அவசியமான பல சாதனங்களில்

## பத்திரிகா கைங்கர்யம்

ஒன்றென ஓர்ந்து 'ராஸ்ட் காப்டார்' என்ற வாரப்பத்திரிகையை 1851-ம் ஆண்டின் ஆரம்பத்தில் வெளியிட்டார். இப்பத்திரிகை குஜராத்தி பாஷையிலே எழுதப்பட்டுவந்தது. இதில் பெண்கல்வி, பாஷாபிமானம், விதவா விவாஹம், இந்து மதாசாரம் என்ற பல்வேறு தலையங்கங்களைக்கொண்ட

வியாசங்கள் பல இவரால் வெளிவந்தன. இதுவே பம்பாய் மாகாணத்தில் தாய் பாஷையாகிய குஜராத்திமொழியில் வெளிவந்த முதல் பத்திரிகையாகும். இவ்விதமாக ஆசிரியரென்னும் அருந்தொழிலில் இவருக்கு எட்டு வருஷகாலம் இமைப்பொழுதாகச் சென்றது. பின்பு, 1855-ம் வருஷத்தில் நௌரோஜிக்குச்

### சீமை பிரயாணம்

நேர்ந்ததினிமித்தம் அவர் உபாத்தியாயப் பதவியைவிட்டு, மேல்நாட்டிற்குப் பிரயாணமானார். 'காமா கம்பெனி' யின் சொந்தக்காரர்களான பார்சி கூட்டு வியாபாரிகள், லண்டன்மாநகரில் ஓர் கிளை வியாபார ஸ்தலத்தை ஸ்தாபித்து, நௌரோஜிக்கு அதனை மேற்பார்வை பார்க்கும் (மானேஜர்) பதவியையளித்து அவரைச் சீமைக்குப் பிரயாணப்படுத்தினர். ஆசிரியராகவும் நண்பராகவும் மாணவர்களை ஊக்கிவந்த தாதாபாயின் மாணவச்சமூகம், அவர் பிரிவுக் காற்றாது, "தாதா-கல்வியைத்தா! தா! என்று இனி எப்போது கேட்போம்" என ஏங்கி, நௌரோஜியென்னும் தீபக்குறைவால் இருளை அடைந்தது.

(தொடரும்) S. V. வரதராஜய்யங்கார், சரஸ்வதி நிலையம், உறையூர்.

---

## பாமரர்களின் பரிதாபநிலை.

நேயர்காள் !

புண்ணிய பூமியாம் நம் பாரதநாடு தற்காலம் அடைந்திருக்கும் நிலைமையைப்பற்றி யான் அதிகம் கூறவேண்டுவதில்லை. உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமுமின்றித் தவிக்கும் ஏழைச் சகோதர சகோதரிகளை நம்தேசத்தின் நாலாபக்கங்களிலும் காணலாம்.

சில ஆண்டுகளுக்குமுன் நம் தேச ஏழைச் சகோதர சகோதரிகளுக்குத் தரித்திரமென்பதே இல்லாதிருந்தது. ஏனென்றால் அக்காலத்தில் அவர்களுக்கு ஒழிவுநேரங்களில் செய்யக்கூடிய பல வேலைகளிருந்தன; அதனால் அவர்களுக்கு நல்ல ஊதியமும் கிடைத்தது.

உதாரணமாக, சில ஏழைகளுக்கு நெல்குத்துவதில் அதிக சம்பாதனையிருந்தது. அந்தச் சம்பாதனையை நிறுத்த, தற்பொழுது சில கனவான்கள் மேல் நாட்டாரால் செய்யப்பட்ட நெல் இயந்திரத்தைக்கொண்டு நெல்லை அரிசியாக்கிக்கொள்கின்றனர். இதனால் நம்நாட்டு ஏழைகளின் குந்தாணி, உலக்கைகளெல்லாம் அவரவர்கள் வீடுகளின் அட்டங்களில் தூங்குகின்றன. அதனால், அவர்களின் ஜீவனத்திற்கே கஷ்டமாயிருக்கிறது. மற்றும் சிலர் ஒழிவுநேரங்களில் நூல் நூற்று அதினின்றும் கிடைக்கும் ஊதியத்தைக் கொண்டு ஜீவனம் செய்துவந்தார்கள். துணிகளைச்செய்ய இயந்திரங்கள் வரவே, ஏழைமக்கள், நூற்கும் தொழிலின்றி, ஜீவனத்திற்கு ஏங்கலாயினர்.

இருளைப்போக்கச் சந்திரன் தோன்றுவதுபோல் நம் நாட்டு ஏழைகளின் கஷ்டத்தை நீக்கிச் சுகத்தைத் தர மகான் காந்தி தோன்றியுள்ளார்.

அம் மகானது மொழிகளை அன்புடன் ஏற்று நாம் நடப்போமானால் அன்றே நமது கஷ்டங்கள் யாவும் பொட்டெனப் பறக்கும்.

ஆதலால் சகோதர, சகோதரிகளே! மகாத்மா சொற்படி அயல்நாட்டு வஸ்திரங்களை உடுத்துவதைவிட்டு, நம் நாட்டு ஏழைச் சகோதர, சகோதரிகளால் செய்யப்பட்ட கதராடைகளை உடுத்துவீர்களாகில் நம் நாட்டு ஏழைகளின் வறுமையைப் போக்கியவர்களாவீர்கள். மற்றும் நெல் அரைக்கும் இயந்திரங்களையும் பகிஷ்கரிப்பதினால் ஏழைகளுக்கு நல்ல வேலைகள் கிடைத்து அவர்கள் சுகித்து வாழ இடமுண்டாகும்.

ஆகவே அன்பிற்சிறந்த அருமைச் சகோதர, சகோதரிகளே! மகான் காந்தியினது வார்த்தைகளை ஏற்று, ஒழிந்தநேரங்களில் நூல் நூற்றலைச் செய்யுங்கள்; ஏனையோரையும் நூற்கச் செய்யுங்கள்; கைநூலால் நெய்த துணியையே நீங்கள் உடுத்தி ஏனையோரையும உடுத்தச் செய்யுங்கள்; நெல்லை இயந்திரங்களில் அரைக்காமல், ஏழைமக்களுக்கு ஊதியத்தைக் கொடுத்து நெல்லை அரிசியாக்கிக்கொள்ளுங்கள். இதனால் பசியால் மெலிந்துவாடும் ஏழைகள் அனேகருக்கு நீங்கள் அன்னமிட்டவர்களாவீர்கள்; புண்ணியமுமுண்டு.

N. V. இராஜகோபால் நாயுடு, 11397 நெ. சந்தாதார்.

---

## காங்கிரஸ் தொண்டும் காந்தியடிகளின் வருகையும்.

அறப்பணியால் சிறந்தது பாரத நாடு! தர்மஸ்வரூபிகள் பல ரிடைவிடாது இந்நாட்டில் தோன்றிக்கொண்டே யிருக்கின்றனர். தியாகமே இவர்களது ஸ்வரூபம். அதன் அழைப்பால் பல அகக்குருடர்கள் விழிபெற்றுச் சன்மார்க்கததிலீடுபடுகின்றனர்; ஓர் உரிமை உணர்ச்சி பெறுகின்றனர். மக்களின் பாபச் செய்கையின் காரணமாகவும் தன்னை மறந்து தனக்கே கேடுதேடும் பேதைமையாலும் கண்கலங்கி நின்றாள் பரிசுத்த பாரத அன்னை! தொண்டராற் சிறந்தநாட்டில் பேதைமை நிறைந்ததுகண்டு அவள் வருந்தினாள்! தொண்டர்களின் வருகை தாயின் கலங்கிய கண்ணீரை ஆனந்தக் கண்ணீராக்கிற்று; அவள் உள்ளம் மகிழ்ந்தது; திருமுகம் மலர்ந்தது; புன்நகைபூண்டாள்! தன்னைப் பிடித்தாட்டு மடிமைப்பேயை ஓட்டவந்த சுதந்திர மந்திரவாதிகளை ஆசீர்வதித்தாள்.

தொண்டு-பலவகைப்படும். அவற்றுள் தெய்வத் தொண்டே சிறந்தது. தொண்டை யியற்ற உரிமைவேண்டும். நாட்டையளிக்கும் மன்னர்களும் அதில் வாழும் மக்களும் ஒரேமதத்தினரா யிருத்தலும் வேண்டும். அரசனுக்கு ஆஸ்திக புத்தியும், சமயப்பற்றும், மக்களிடத்து மிகுந்த அன்பும் வேண்டும். அன்பே உலகில் மக்களை வளர்க்கும் பால்! அப் பால் அரசனுக்குக் குடிகள் பால் அன்பையும்—பக்ஷத்தையும், தாய்க்குக் குழந்தையினிடத்து அன்பையும்—வாஞ்சையையும், ஸ்திரீ புருஷர்களுக்குள் (கணவன் மனைவிகளுக்குள்)

அன்பையும்—காதலையும், பிறரிடத்து அன்பையும்—நட்பையும் உண்டுபண்ணித் தேசத்தையே அன்புமயமாக்கிவிடும். இவையனைத்தும் பொருந்தப் பொலிந்தது நம்பாரதநாடு—அது இறந்தகாலத்தில்! நிகழ்காலத்தில் அந்தோ! அன்பினருள் மங்கிற்று! பிறநாட்டார் நம்மை அடிமைப்படுத்தி ஆட்சி புரிகின்றனர். ஆட்சியாளர் மதம்வேறு! மக்களின் சமயம் வேறு! உலகிலெங்கும் மிருகபல மோங்கி, அன்பு மங்கி, பணத்தாசை பொங்கி—நாம் ஏங்கி நிற்கின்றோம். இத்தருணத்தில் தெய்வத்தொண்டை யியற்றுவ தெங்ஙனம்? தேசத்தொண்டு பெருகினன்றோ பின்பு தெய்வத்தொண்டு புரியவியலும்! ஆதலின் பல துறைகளிலும் நமது முன்னேற்றத்திற்குத் தேசத்தொண்டே தற்போது இன்றியமையாததாதலின் அதனைக் குறித்துச் சற்று சிந்திப்பாம்.

தேசத்தொண்டிற் சிறந்தது காங்கிரஸ் சேவை. காங்கிரஸ் என்ற மொழிக்கே ஓர்பெருந் தீக்ஷண்யமுள்ள தன்மையுண்டு! அதன்பெருமை உலகெலாம் பரவி வெளிநாட்டாருள்ளத்தில் விசாலநோக்கமுள்ள கொள்கைகளை வேரூன்றச் செய்கின்றது. பாரதநாட்டின் சிறந்த தேசசேவைக்கும், விடுதலைக்கும் இக்காங்கிரஸ் மஹாசபை ஆஸ்பதமாயிருக்கின்றது. உயர்ந்த ஒழுக்கமும், சிறந்த பக்தியும், பரந்தநோக்கமும், நிறைந்த கல்வியும், பெருந்தன்மையும் உள்ள ஒருவன் காரணமாக ஒருகுடிக்கே சிறப்புண்டாவதுபோல, தெய்வீகன் ஒருவன் இத்தேசத்தொண்டி லீடுபட்டு, பலர் சிந்தைக்குந் தோன்றாத உயர்ந்த சுலபமான தேசசேவை வழியை—நிவர்த்திமார்க்கத்தை நமக்குப் புகட்டி நமது நாட்டிற்கே அழியாப்புகழை ஈட்டிவைக்க நிலவுகின்றான். அப்பெரியோன் உடல்பொருளாவியாம் மூன்றையும் தன்நாட்டின் விடுதலைக்காகவும், மக்களின் க்ஷேமத்திற்காகவும் மனிதன் தியாகம் செய்யத் தயாராயிருக்கவேண்டுமென்பதை நின்று காட்டினான். அவன் பெருமை பெரிது; இந்நூற்றாண்டின் இயேசுவும் புத்தனு மிவனே!

நிற்க, நாட்டில் காங்கிரஸ் இயக்கத்திற்கு ஆதரவு அதிகமாகவே, அதன் தர்மம் அறிவாளிகளின் ஆற்றலைக் கவரவே, பல பெரியார்கள் அதனைச் சார்ந்து தொண்டுபுரிய முன்வந்தனர். பத்திரிகைகளும் விரைவில் தேசபக்தியை நாட்டிற்பரப்பத் தமது கடமையை யுணர்ந்து செய்தன. ஆனால், திருமால்,தேவர்களுக்கு அமுதம் வழங்கவந்தபோது, தேவர்களின் கூட்டத்தோடு கலந்து கோவிந்தம்போட்டு, இறவாத இன்பத்தைப் பெற நினைத்த அசுர கணத்தைச்சார்ந்த இராகுபோல, உண்மைத் தேசாபிமானமின்றிச் சிந்தையிலும், செய்கையிலும் முற்றும் வேறுபட்டு, பத்திரிகைகளில் தமது பெயரை யிடக்காணவும், தம்மைப் பலர் புகழவும் மட்டும் விரும்பி மகிழ்ச்சியடைகின்ற பலர் தம்மைத்தாமே வஞ்சிக்கும் நெஞ்சினரின் கலப்பால் நிவர்த்தியின்னு மேற்படாது நாடுதத்தளிக்கின்றது. இவர்களை பாரதி,

தாயைக் கொல்லும் பஞ்சத்தை—தடுக்க முயற்சியுறார்
வாயைத் திறந்து சும்மா—கிளியே...வந்தேமாதரமென்பர்.
(நடிப்பு சுதேசிகள்-18)

என்று கூறி வெறுத்தார்; காந்தியடிகளும் மனம் வருந்தினர்.

தேசத்தின்—சமூகத்தின் க்ஷேமத்தைக்கருதி அடிகளருளிய அறவழிகளை நம் நாட்டினர் போற்றினும் அவற்றை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதில்லை. மேனாட்டார் அவரது உபதேசங்களையும், நெறிகளையுங்கண்டு போற்றி யாதரித்துத் தீர்க்கதரிசியெனக் கொண்டாடி வணங்குகின்றனர்; அடிகளை நேரிற்கண்டு கிருதார்த்தர்களாக எண்ணிவருகின்றனர். அந்தோ! நாமோ ஜாதிமதச் சண்டைகள், சுகம், சொகுசு, உல்லாசம் முதலியவற்றில் நமது வாணாளை அளவுக்குமிஞ்சிச் செலவிட்டுத் தயங்கி நிற்கிறோம். தர்மோபதேசம் நமது காதுக்கெட்டியும் கருத்தினி லமைத்திலோம். அரக்கரானோம்! அறனை மறந்தோம்! அவர் மனதைப் புண்படுத்தினோம்! அவர், கதர்! கதர்! என்று கதறினார். சர்க்காவைச் சுற்றுங்களென்றார். நாம் சர்க்காரையே சுற்றுகிறோம்! சாந்த குபேரரான அடிகள் நமது செய்கைக்காகப் பெரிதும் வருந்தி, கடந்த இரண்டு ஆண்டுகளாக நமக்கெல்லாம் நல்வழிப்படுமியல்பை யருளுமாறு இறைவனை வேண்டி நின்றார். இவ்விரண்டு வருடகாலமும் இயேசுகொண்ட ஓய்வுகாலமாயிற்று. அழகான அசாமில் அகில இந்திய காங்கிரஸ் மகா சபை கூடியகாலத்தில், "இராட்டினமே நமது அடிமைத்தனத்தையும் பேதைமையையும் நசிக்கச்செய்யும் விஷ்ணுசக்கரம். இதுவே; எனது பூரண நம்பிக்கை" என்றார். அமுதம்போன்ற இம்மொழிகளைக் கேட்டுப் பாரத அன்னையின் உள்ளம் பூரித்தது; அவள் ஆனந்தமெய்தினாள். 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்ற வாக்கை மெய்ப்பிக்கவந்த அவதாரபுருஷர்-ஏழை பங்காளர்-கதர் அபிவிருத்தியை முன்னிட்டு அந்நிதிக்குப் பணம் வசூலிக்க இந்தியநாடு முழுவதும் சுற்றுப்பிரயாணஞ் செய்யப் போவதாகவும் நமது மாகாணத்தில் ஒருமாதகாலம் தங்கி உபதேசம் செய்யப் போவதாகவும் உரைத்தார். 'அடிகளைச் சிறைக்குச் செல்வதற்குமுன் கண்டானந்தித்த தமிழுலகம் மறுமுறை காணப்புரிந்த தவமென்னே' எனத் தமிழருள்ளம் ஆனந்தத்தையடைந்தது.

அன்பர்களே!

அடிகள் ஓர் தெய்வீகப் பிச்சைக்காரர்! நாட்டின் நலத்தைக் கருதியொருவன் பிச்சை யெடுக்கவும் முன்வரவேண்டுமென்ற தத்துவத்தை விளக்கவே அவர் இங்குறுகின்றார். கதரியக்கத்தை வலுப்படுத்த அவர் பிச்சையும் எடுப்பார். பரம ஏழையின் அன்புடன்கூடிய தம்பிடி யிடத்திலேயே யவருக்கதிக விருப்பம்! அவரிடத்தன்புகொள்ளுங்கள்! அணியுங்கள் கதரை! இராட்டையைச் சுற்றுங்கள்! இயன்ற பொருளுதவி செய்து இன்பமடையுங்கள்! அவர் உகப்பார்! அந்த உவகையே நமக்கானந்தம்! இன்பம்! அறனை மறவாது அடிகளைப் பற்றுங்கள்! அடிகள் வாழ்க!!

ஸ்ரீ வே. வ. திருமுக்கீச்சுரம்.

---

**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

# ஆரியசித்தாந்தம்.

(403-ம் பக்கத் தொடர்ச்சி.)

## யோகம்

முன் நித்தியவிதி முதலியவற்றில் யோகம் சுருக்கப்பட்டது. ஜபம் பூஜை களைப் பேசுமிடத்துப் பாரத்வாஜர் "ஆஸநம் ஸ்வஸ்திகம் ப்ரோக்தம் ஜபாதீநிப்ர குர்வத:, குசேசயாஸநம்வாபி வீராஸநம்தாபிவா" என்ற வசனத்தால் ஜபதபாதிகளுக்கு யோகம் அவசியம் வேண்டப்படுமென்று தமது ஸ்மிருதியில் குறிப்பித்தார். எல்லாராலும் அனுஷ்டிக்கத்தக்க மூன்று ஆசனங்களையே கூறினர். யோக அப்பியாசத்துக்கு முதலங்கமாகிய ஆசனத்தை எடுத்துக் கூறினமையால் மற்றையவையும் முறையே கொள்ளப்படும். யாவராலும் பொதுவில் அப்பியாசிக்கப்படும் இயமம் நியமங்களும் யோகாங்கமென்று கூறுவர். இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதியென்று கூறப்படும் எட்டும் யோகாங்கமாம். இதையே அஷ்டாங்க யோகமென்றும், ஹடயோகமென்றுங் கூறுவர் பெரியோர்.

இவற்றுள் இயமநியமங்களிரண்டும் யோகாப்பியாசத்துக்கேயன்றி எல்லாரும் எப்போதும் அனுஷ்டிக்கவேண்டியவை. இவைமுன்னரே கூறப்பட்டனவாயினும் சந்தர்ப்பநோக்கி மீண்டும் கூறுகின்றோம். ஜீவ இம்சை செய்யாமை, சத்தியம், பிறர்பொருளை விரும்பாமை, பிரமசரியம், பொறுமை, தைரியம், தயை, நேர்மை, மிதாகாரம், சௌசம் என்ற பத்தும் இயமமாம். இவற்றுள் பிரமசரியம் என்பது காமத்தை வெறுத்து ஒதுக்குதல். மிதாகாரம் என்பது அரைவயிறு சோறு கறியும், மேல் கால்வயிறு தண்ணீரும் அருந்தி மற்றக் கால்பங்கைப் பிராணவாயு சஞ்சரிக்கும்படிவிடுதல்.

நியமம்-சந்தோஷம், தவம், ஆஸ்திகபுத்தி, தானம், விசுவாசம், தேவாராதனை, வேதாந்த சித்தாந்த சிரவணம், நாணம், மதி, ஜபம், விரதம் இவைகளாம். இவற்றுள் ஆஸ்திகபுத்தி என்பது தெய்வம், புராணம், இதிகாசம், ஸ்மிருதி இவைகளில் நம்பிக்கைவைத்தல், நாணம் என்பது செய்யத்தகாத காரியங்களைச் செய்வதற்கு அஞ்சுதல், மதி என்பது நித்திய நைமித்திக கன்மங்கள்செய்வதில் சிரத்தை, விரதம் என்பது முற்கூறிய உபவாசம்.

இயமநியமங்களில் சித்திபெற்றவன் யோகப்பயிற்சிக் குரியவனும். இவன் கர்மானுஷ்டானங்களைச் செய்கிறவனும், சிற்றின்பத்தில் வெறுப்புள்ளவனும், சர்வசங்கப்பரித்தியாகனும், கற்றுணர்ந்தவனும், சத்திய தர்மங்களில் உறுதியுள்ளவனும், கோபமில்லாதவனும், குருபணிவிடையில் விருப்பமுள்ளவனும், யௌவனனும், பலமுள்ளவனும், சாந்தம் வைராக்கிய முள்ளவனும், மோட்ச விருப்பமுள்ளவனும் இருக்கவேண்டும். அதிக

போஜனம், அதிகநடை, விவகாரம், அதிகப்பேச்சு, அதிகாலையில் ஸ்நானம் செய்தல், இரவில் புசித்தல், நியமமற்ற போஜனம், துஷ்டசகவாசம் இவைகள் கூடா. ஞானம், திடம், உற்சாகம், சாந்தி இவைகள் யோகசித்தியைத் தரும். இப்படிப்பட்டவனே யோகம் செய்யத்தக்கவனும். சில நூல்களில் ஸ்திரீ சூத்திரர்கள் யௌவனர் விருத்தர் எல்லாரும் யோகாப்பியாசம் செய்யலாமென்று கூறப்பட்டிருக்கின்றது. ஆயினும் அவர்களும் முற்கூறிய இலக்கணமுள்ளவர்களாகவே யிருக்கவேண்டும்.

யோகத்திற்கு ஆசனமே முதலங்கமாம். ஸ்ரீ ரமேசுவரர் ஒருகாலத்தில் ஒரு தீவிலிருந்துகொண்டு உமாதேவிக்கு இந்த யோகத்தை உபதேசித்தார். ஒருவருமறியாவண்ணம், தனிமையாயிருந்துகொண்டு உபதேசித்தார். அருகிலிருந்த ஜலத்திலுள்ள ஓர் மீன் அதைக் கேட்டுக்கொண்டிருந்தது. அதனால் அது நிச்சலனமான ஏகாக்கிர சித்த முடையதாயிற்று. அதையறிந்த பரமசிவன் அதற்குத் திவ்யசொரூபமளித்து மச்சேந்திரரென்று அழைத்தார். அதனால் அவருக்குப் பூமியில் மச்சேந்திரரென்று பேர் வழங்குகின்றது. மச்சேந்திரர் கைகால் குறைந்த சௌரங்கியென்னும் ஒரு முடவருக்குக் கைகால்களை அளித்து யோகோபதேசம் செய்தார். இவர்களாலும், பதஞ்சலி கோரக்கர் முதலியவர்களாலும் பூலோகத்தில் யோகசாஸ்திரம் பரவப்பெற்றது. இவர்களிடமிருந்து யோகம் பரம்பரையாக அனுஷ்டிக்கப்பட்டது.

யோகத்துக்கு ஆசனம், கும்பகமென்னும் சித்திரம், முத்திரையாகிய கரணம், நாதானு சந்தானம் என்னும் நாலும் யோகாங்கமாம். பிரத்தியாகாரம் முதல் சமாதிவரையிலுள்ளவைகள் நாதானு சந்தானத்தில் அடங்கும். எண்வகை யோகங்களில் ஆசனமே முதலாவது. ஆசனத்தை அப்பியாசித்துத் தனக்கு ஒத்த ஆசனத்தை அனுஷ்டிக்கவேண்டும்.

எண்பத்துநாலு இலட்சம் ஜீவபேதங்களிலிருந்து ஆசனங்கள் அறியப்பட்டன. அவை ஸ்ரீ பரமேசுவரனே அறிவார். எணபத்துநாலு இலட்சங்களிலும் இலட்சத்துக்கு ஒவ்வொன்றாகப் பொறுக்கி எண்பத்துநாலு ஆசனங்களே யோகசாஸ்திரங்களில் கூறப்பட்டன. இவை பரமேசுவரனால் சொல்லப்பட்டவை. ஆசனங்களாவன-ஸ்வஸ்திகம், கோமுகம், வீரம், கூர்மம், குக்குடம், உத்தானகூர்மம், பச்சிமதானம், மயூரம், மச்சேந்திரம், தனுராசனம், சித்தாசனம், பத்மாசனம், பத்திராசனம், சிம்மாசனம், சவாசனம் என்பனவாம். இவற்றுள்ளும் சித்தாசனம், பத்மாசனம், பத்திராசனம், சிம்மாசனமென்பன சிறந்தனவாம். சித்தாசனம் மச்சேந்திரராலனுட்டிக்கப்பட்டிருப்பதனால் இது மச்சேந்திரசித்தாசனமென்னப்படும். இவ்வாசனங்களெல்லாம் குரு உபதேசக் கிரமத்தால் பழகவேண்டும். இவற்றுள்ளும் மதாந்தர பேதங்களுண்டு. இவற்றையும் குருமூலமாகவே தெரிந்துகொள்ளவேண்டும். இந்த நான்கு ஆசனங்களையும் யோகநூல்கள் மிகவும் புகழ்ந்து பேசுகின்றன. இவையெல்லா ஆசிரமிகளாலும் அனுஷ்டிக்கத்தக்கனவாயினும் பதுமாசனம் கிருகஸ்தர்களாலும் மற்றைய ஆசனங்கள் ஏனைய ஆசிரமிகளாலும் அனுஷ்டிக்

கத்தக்கனவாம். இவற்றுள் ஏதேனும் ஒன்றைத் தனக்கு ஏற்றவாறு தெரிந்து பழகிப் பின்னரே யோகப்பயிற்சி செய்யவேண்டும். சிறந்த இவ்வாசனங்களைச் சிறிது விரித்துக் கூறுவாம். யோகி எப்போதும் சித்தாசனத்திலேயே உட்கார்ந்திருக்கவேண்டுமென்று நூல்கள் கூறுகின்றமையால் நான்காசனங்களிலும் சித்தாசனம் சிறந்தது. மச்சேந்திரரால் அனுஷ்டிக்கப்பட்டமையால் இது மச்சேந்திர சித்தாசனமென்று கூறப்பட்டது. சித்தாசனமென்பது சித்தர்களுக்குரிய ஆசனமென்று பொருள்தரும்.

குதத்திற்கும் உபஸ்தத்திற்கும் மத்தியில் இடதுகாலின் பாதமூலத்தால் அழுத்திக்கொண்டு இடதுபாதத்தை லிங்கஸ்தானத்தில் வைத்துக்கொண்டிருக்கவேண்டும். இருதயத்திற்கும் இடையில் நாலங்குலம் இருக்கும்படி மோவாய்க்கட்டையை நிறுத்திப் புருவமத்தியிற் பார்வையைவைத்து இறுமாந்திருப்பதாம். இதுவே மச்சேந்திர சித்தாசனமாம். இதனைப் பலர் பலபடியாக அனுஷ்டிப்பார்கள். இடது பாட்டை இலிங்கத்தின்மேல் வைத்து இடதுபாகத்தின்மேல் வலது பாட்டை வைத்துக்கொண்டிருப்பதும் சித்தாசனமாம். இது மதபேதமாகையால் வேறுபடாது. ஏனெனில் யோகிகள் தத்தம் சௌகரியத்துக்கேற்க அறிந்து செய்துகொண்டார்களாதலால் பேதமில்லை. இப்படிப்பட்டவைகள் வருமாறு. வஜ்ராசனம், முக்தாசனம், குப்தாசனமென்று கூறப்படுவனவாம். சிலர் இடதுகால் பாட்டை யோனிஸ்தானத்தில் வைத்து, வலதுபாட்டை (முளி) இலிங்கத்தின்மேல் வைத்தலைச் சித்தாசனமென்பர். இதை மாறிவைப்பது வஜ்ராஸனமென்னப்படும். வலது கால்பாடு இடது பாடுகள் இரண்டையும் கீழும் மேலுமாகச் சேர்த்து யோனிஸ்தானத்தில் வைத்திருப்பது முக்தாசன மென்னப்படும். மேலும் கீழுமாகச் சேர்க்கப்பட்ட பாடுகளை இலிங்கஸ்தானத்தில் வைப்பது குப்தாசன மெனப்படும்.

இயமத்தில் மிதாகாரமும், நியமத்தில் ஜீவ இம்சை செய்யாமையும் பிரதானம். அதுபோல ஆசனங்களில் சித்தாசனம் சிறந்ததாம்.

எழுபத்தீராயிரம் நாடிகளையும் சோதிப்பதாதலால் சித்தாசனம் எல்லா ஆசனங்களிலும் சிறந்தது. மிதாகாரமுடையவனும் பிரமதியானம் செய்துகொண்டு சித்தாசனத்தைப் பன்னிரண்டு வருஷம் அப்பியாசித்தால் அவன் யோகியேயாவான். வேறு பழக்கங்கள் வேண்டுவதில்லை. இந்தச் சித்தாசனத்தால் பிராணவாயு கட்டுப்பட்டுக் கும்பகத்தில் அடங்கிநிற்கும். மூலபந்த முதலியவற்றால் வருத்தமில்லாமல் உன்மனாவஸ்தை சித்தியாம். பிராணவாயு ஆக்கினையைக்கடத்தல் உன்மனி அவஸ்தையாம்.

பத்மாசனமாவது பிரயத்தனத்தால் இருபுறங்கால்களையும் தொடையின் மேல் நிறுத்தி, இரண்டு கைகளையும் தொடையின்மேல் வைத்துக்கொண்டு மூக்குநுனியில் பார்வையைச் செலுத்தி, இருபக்கங்களின் மூலத்தில் நாவை வைத்து மார்பில் மோவாய்க்கட்டையை வைத்துக்கொண்டு வாயுவைப்போ லெழும்புதல் பத்மாசன மென்னப்படும். இதனால் வியாதிகளெல்லாம் ஒழி

யும். இதுவே ஜிஹ்வாபந்தமும் மூலபந்தமுமாம். இதனைக் குருமூலமாய்த் தெரிந்துகொள்ளவேண்டும். இவ்வப்பியாசத்தால் பிராணவாயு மேலெழும்பிச் சுழுமுனைமார்க்கமாய்ச் செல்லும். அந்த வாயுவை பூரகம்செய்து அபானத்துடன் ஐக்கியம் செய்வதால் ஞானசித்தியுண்டாகும்.

பீஜத்தின் கீழுள்ளநரம்பின் வலதுபுறத்தில் இடதுபாட்டையும், இடதுபுறத்தில் வலதுபாட்டையும் சேர்த்துவைப்பது சிம்மாசனமாம். முழங்கால்களின்மேல் இரண்டு கைகளையும் பொருந்தவைத்து விரல்களை விரித்துக்கொண்டு வாயைத்திறந்து நாவை நீட்டிக்கொண்டு புருவமத்தியைப் பார்த்துக்கொண்டிருப்பது மொன்று. இதனால் மூலபந்தம் ஜிஹ்வாபந்தம் ஜாலந்தரபந்தம் மூன்றையும் சம சித்தியாக்கும்.

பீஜஸ்தானத்தின் கீழிருக்கும் நரம்பின் வலதுபுறத்தில் வலது பரட்டையும் இடதுபுறத்தில் இடதுபாட்டையும் சேர்த்து இருப்பது பத்திராசனமாம். இதனைக் கோரக்ஷாசனமென்றும் கோரக்காசனமென்றும் கூறுவர்.

மிதாகாரம் கொள்ளும் யோகிகள் சில பொருள்களைத் தள்ளிப் புசிக்கவேண்டும். கசப்பு, புளிப்பு, உறைப்பு, உப்பு, வெப்பமானபொருள் (வெல்லம் முதலியவை), கீரை, எண்ணெய், சொள், கள், எள், கடுகு, மீன், ஆடு முதலியவற்றின் மாமிசம், தயிர் மோர், இலந்தைப்பழம், பெருங்காயம், பிண்ணாக்கு, வெண்காயம், வெள்ளைப்பூண்டு, உளுந்து, கடலைமுதலிய விருத்திக்குரிய பதார்த்தங்களும் ஆகாவென்று விலக்கப்பட்டன. சோளம், வரகு, மறுபடியும் சுடவைத்த அன்னம் குழம்பு இரசம் காந்தின சோறு நெய் முதலிய சேராத பதார்த்தங்களும் விலக்கப்பட்டன. அவசியம் வேண்டுமானால் கொஞ்சமாய் உப்புசேர்த்துக்கொள்ளலாம்.

யோகாப்பியாசகாலத்தின் ஆரம்பத்தில் நெருப்புக்காய்தல், ஸ்திரீஸம்போகம், தீர்த்தயாத்திரை நடை இவற்றை ஒழித்துவிடவேண்டும். குளிர் உண்டாதலால் அதிகாலை ஸ்நானம் உபவாசம் அதிகபாரஞ் சுமத்தல் சூரிய நமஸ்காரம், சரீரப்பிரயாசந்தரும் மற்றைய செய்கைகளும் ஆரம்பயோகிகள் விலக்கிவிடவேண்டும். அப்பியாசத்தில் சித்திபெற்றபின் நெருப்புக்காய்தல், இல்லறத்தான் ருதுகாலத்தில் தன் மனைவியுடன் கூடுதல், தீர்த்தயாத்திரை முதலியன செய்தல் கூடும் என்பதாம்.

கோதுமை, நெல், யவம், அறுபதாம் குறுவை நெல்லரிசி இவற்றாலாகிய சாதம், பால், நெய், சர்க்கரை, கற்கண்டு, சுக்கு, பேய்ப்புடல், பாசிப்பயறு, குற்றமற்ற நீர் இவைகள் கொள்ளத்தக்கனவாம். தேகத்திற்குப் புஷ்டி தருவனவும், மதுரமுள்ளனவும், மெதுவானவையும், நெய்சேர்ந்ததும், மனதுக்குப் பிரியமுள்ளதும், விலக்கப்படாதவையான பதார்த்தங்களையும், தாதுவை வளர்ப்பதுமான பதார்த்தங்களையும் புசிக்கலாம். கூடாவென்று விலக்கப்பட்டவை மனதுக்குப் பிரியமுள்ளவையானாலும் கொள்ளலாகாது.

(தொடரும்.) சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

*

உ

சிவமயம்.

# சைவ சித்தாந்தப் பகுதி.

(401-ம் பக்கத் தொடர்ச்சி.)

## எறிபத்தநாயனுர் புராணத்தின் சில விசேடக் குறிப்புகள்.

### புட்பப் பணி.

சரியையாதி நான்கினுஞ் சரிப்போரியற்றும் புட்பப் பணியின் பொது விதியாவது :—

விடிய ஐந்துநாழிகை அளவில் எழுந்து ஊர்ப்புறத்துச் சென்று விதிப்படி மலசலங் கழித்து, சௌச முடித்து, தந்தசுத்திசெய்து, நீராடி, தோய்த்துலர்ந்த மடியுடுத்தி, விபூதியுருத்திராக்கமணிந்து, திருவைந்தெழுத்தைத் தியானித்து, வாய்கட்டிக்கொண்டு நாபியின் கீழ்ச் செல்லாது மேலே உயர்த்திய கரத்தில் திருப்பூங்கூடையைக் கொண்டு, நந்தனவனத்துட் புகுந்து, அதில் வசிக்குந் தேவர்களையெல்லாம் தான் மலர் கொய்யும்வரை விலகியிருக்கும்படி பிரார்த்திக்க வேண்டும்.

பிறகு கொத்துக்களின் தலைகளைக் கொய்தால் தேவர்களின் முடிகளைக் கொய்த பாவமுறுமாதலால், மறந்தும் ஒருமுறையேனும் அவைகளைக் கொய்யாது, பத்திரபுட்பங்களை ஒவ்வொன்ருகக் கொய்து திருப்பூங்கூடையிலிட்டு, கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூவெனும் நால்வகைப் புட்பங்களில் ஏற்றவைகளை வண்டுகள் உழுது உச்சிட்டமாக்குமுன், ஏற்றகாலத்தில் எடுக்கத்தக்கவைகளை எடுக்கு முறையில் எடுத்து, பின்னர்த் தேவர்களை அவ்விடத்தில் எழுந்தருளப் பிரார்த்தித்தல் வேண்டும்.

வில்வம் சிவபிரானுருவமென்று சிவாகமங்கள் கூறுகின்றமையினுலே, அவ்வில்வ விருட்சத்தின் நிழலை மிதியாது அணுகி ஓர் புறத்தில் நின்று அதனைத் துதித்துப் பிரார்த்தித்து, முக்கிளை யுள்ளவைகளைப் புழுக்கடி முதலிய குற்றங்க ளில்லாதனவாய்த் தெரிந்தெடுத்து வணங்கி மீளவேண்டும்.

பாதசுத்தி செய்துகொண்டு, புட்பமண்டபத்திலிருந்து பழுதகற்றி, இன்ன இன்ன தேவர்க்கு இவை இவை ஆகுமென வுணர்ந்து, அவைகளைக் கொண்டு கண்ணி முதலிய மாலைகளை அமைத்து, சிவபிரான் முதலியோர்க்குக் காலந்தோறும் ஏற்றவையறிந்து முறைப்படிசாத்தி வழிபடுவதாகும்.

திருப்பூங்கூடையை நாபிக்குக்கீழே பிடியாது ஒரு தண்டின் நுனியிலேகட்டி உயரப்பிடித்தலும் உண்டு.

"புலரியி னெழுந்து புதியநீர் படிந்து புண்ணிய வெண்பொடி சாத்தி
மலிசெழு மலர்பெய் கூடையோர் கரனும் வருபுனற் றசும்பொரு கரனும்
பலனுற வேந்திப் பிதிர்சண் டாளர் பரமனைப் பழித்தவர்க் கண்டா
லலரியை நோக்கி யைந்தெழுத் துன்னி யணிவெண்ணீ றொளிநுத லணிந்தே"

(கருவூர்ப்புரா-நியமச்சருக்கம்-27.)

"நந்தன வனத்தி லணுகிமென் கமல நான்முக ஞரண னமல
னுந்துமா தவர்மா முனிவரர் வலாரி யும்பரு மொருங்குவீற் றிருக்கும்
மைந்துழா யடியி னறும்புனல் பெய்து பரவிமுக் கால்வலஞ் சூழ்ந்து
முந்துறத் தமியேன் மலர்கொயுங் காறு மகலுவீ ரெனக்கா முகிழ்த்தே"
(கருவூர்ப்புரா-நியமச்-28.)

"தேசவிர் கொத்தின் றலைகளைக் கொய்யிற் செங்கண்மால் செழுமுடி கொய்யு
மாசுறு பாவ மொருபொழு துறினுந் தீரா கணுகுமென் றறிந்து
பாசிலை யொவ்வொன் றுய்வுறக் கொய்து பனிமலர் நாட்கதி ரிணைசேர்
மாசறு மிலையோ டவைமுறை கொய்து வாய்த்தபைங் கூடையிற் பெய்து"
(கருவூர்ப்புரா-நிய-29.)

"அருமறைக் கிழவன் முதலியர் தமையீண் டெழுந்தரு ளுகவென வேண்டி
யிருகர முகிழ்த்தா கமமுறை யாவுங் கூவிளை யெம்பிரா னுருவ
மருமல ரிலைகாய் மாமரத் தொடுவே ரதன்மண முதலிய வனைத்து
திருமலற் குவப்பென் றறையுமென் றுன்னி வில்லுவ நிழன்மிதி யாமே."
(கருவூர்ப்புரா-நியமச்சருக்கம்-30.)

"ஒருபுடை மருவி யிறைஞ்சியொன் றிரண்டு நான்குறு கிளைகளை யொருவிச்
செருமுமுள் ளுறிற்பல் பொறிப்புலி யாவர் திண்பணை முறிந்திடி னிரய
மருவுவ ரிலையிற் பழுதுள வேனும் பழுதல நாகர வண்டுண்
கிருமியின் கூடு பழுதென வகற்றி யிலையைமுக் கிளையொடுங் கொய்து"
(கருவூர்ப்புரா-நியமச்-31.)

"பெய்துகூ டையினுட் சினகரம் போகிப் பிறங்கவோர் சாரிடை வைகி
மையுற லொழிய மீளவு மாய்ந்தாய்ந் தரியதண் புனலிடை யலசி
மையறு முளத்த ராகிவெற் பீன்ற வடிவுடை நாயகி யெனவாழ்
தையலோர் பாகற் களித்துளோர் சாரூ பத்தினைச் சார்குவர் திண்ணம்."
(கருவூர்ப்புரா-நியமச்-32.)

என்பன இவ்விதியை விளக்குவனவாம்.

கோட்டுப்பூக்களாவன:—

"வன்னிபலா வெலுமிச்சை நாரத்தை கோங்கு மந்தாரை யூமத்தை
மாவிலிங்கை நொச்சி
பன்னியகில் சந்துமகிழ் மாதுளைமா வசோகு பாதிரிவெள் ளெருக்கிலந்தை
பலாசுநுணு நறவம்
புன்னைவிளா மருதுகொன்றை நெல்லிகுராச் செருந்தி பொன்னிணு
விரைகிளுவை குருந்துவில்வ நாவன்
மன்னுதா தகிகுளஞ்சி யலரிவெட்சி மல்லிகைசண் பகஞாழல்
கோட்டுப்பூ வகையே. (ஞானப்பிரகாசர்-புட்பவிதி-2)

என்பதிற் கூறப்பட்டனவாம்.

கொடிப்பூக்களாவன:—

"மருவாருங் காந்தள் காட்டு மல்லிகை முல்லை மௌவல்
கருவார்வெற் றிலையே தாளி கருமுகை கருங்காக் கொன்றை
முருகாரும் வெண்காக் கொன்றை குருக்கத்தி முதலா வுள்ள
விருவாட்சி கொகுடி பிச்சி யிவையெலாங் கொடிப்பூ வாமே."
(ஞானப்பிரகாசர்புட்பவிதி-3.)

என்ற செய்யுளிற் கூறப்பட்டனவாம்.

நீர்ப்பூக்களாவன :—

“ செய்ய தாமரை சேர்ந்தபொற் ருமரை
தூய்ய தாமரை சொல்லிரண் டுற்பல
மைய செம்மைய வெண்மைய வாகிய
நெய்தன் மற்றிவை நீரின் மலர்களே” (ஞானப்பிர-புட்ப--4.)

என்ற செய்யுளிற் கூறப்பட்டனவாம்.

நிலப்பூக்களாவன :—

“பட்டிநா யுருவி பூளை பச்சைசெவ் வந்தி தும்பை
வெட்டிவேர் மருக் கொழுந்து கரந்தையே விஷ்ணு காந்தி
மட்டவிழ் துழாய்செங் கீரை மத்தைசெம் பரத்தை வங்க
மிட்டகோக் கிற கனிச்சம் வலம்புரி யிவை நிலப்பூ.”
(ஞானப்பிர-புட்-5.)

என்ற செய்யுளில் உரைக்கப்பட்டனவாம்.

(தொடரும்) பஞ்சாட்சரபுரம், வாலையாநந்தம்.

# வைணவப் பகுதி.

## ஸ்ரீ ஆண்டாள்.

(409-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆண்டாளுக்கு விளையாட்டுப் பருவத்தில் எழுந்த பக்தி யென்னும் பயிர், அவளுடைய தந்தையின் சீரிய வொழுக்கமென்னும் நீர் பாய, நாளும் வளர்வதாயிற்று. அவள் தந்தையாகிய ஆழ்வார் வடபெருங் கோயிலுடையான் பொருட்டாகத் தாம் ஏற்படுத்திய நந்தவனத்திற்குத் தினமும் விடியற் காலையிலேயே யெழுந்துசென்று மலர்ச்செடிகளுக்கு எருவிடுதல், களைகட்டுதல், நீர் பாய்ச்சுதல் முதலியவற்றைக் காலந்தவறாது செய்துவருவார்; ஆங்கு உரிய காலத்தில் மலரும் பலநிறத்து நறுமலர்களைக் கொய்து மாலை கட்டுவர்; கட்டிய மாலையைத் தூய்தாகக் காப்பர். ஒருவர், பெற்றது அமிருதமே யெனினும் அதனைப் பிறரும் தாமுமாக நுகர்தல் வேண்டுமென்பது பெரியவர் கொள்கையன்றோ? அதற்கிணங்க, பெரியாழ்வார், பகவானைக் கண்களாரக் காணுதல், மனமாரத் தியானித்தல், வாயாரப் புகழ்தல் என்னும் இச் செய்கைகளால் வரும் இன்பத்தையே, உலகத்து ஒருவர், அடையத்தக்க பேறுகளில் சிறந்தபேருகக் கருதுபவராதலின், அவர், தாம் அனுபவிக்கும் அவ்வின்பத்தை மற்றையரும் அனுபவிக்க விரும்பினர். அதனால் அவர், கண்டவரை யெல்லாம் “வாழாட்பட்டு நின்றீர் உள்ளீரேல்”, “இராக்கதர் வாழ் இலங்கை பாழாகப் படை பொருதானுக்கு”, “அடிதொழுது ஆயிர நாமஞ் சொல்லிப்” “பந்தனைதீரப் பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்று பாடுதும்”, “கூடுமன முடையீர்கள் வரம்பொழி வந்து ஒல்லைக் கூடுமினோ” என்று அழைத்துச் சென்று, தாம், கட்டிக்காத்த மாலையை ஸ்ரீ வில்லிபுத்தூருறைவானுக்குச் சாத்தி அனைவரும் இன்புறுதல் கண்டு தாமும் இன்புறுவர். இவ்வாறு தினமும் ஆழ்வாரின் நினைவெல்லாம், தன்னை உள்ளன்போடு வழிபடுவாருடைய உள்ளத்தையே தனக்குக் கோயிலாகக் கொள்ளும்

பெருமானிடத்துச் சென்றதென்றால், அவர் புத்திரியான கோதைக்கு எம்பெருமானிடத்து எழுந்த பக்தியைச் சொல்லுதலும் வேண்டுமோ? ஆண்டாள், தினமும் தன் தந்தையைத் தொடர்ந்து நந்தவனத்திற்குச் செல்லுதலிலும், மலர்களைக் கொய்தலிலும், தந்தை மாலைகட்ட அவர்க்குத் துணையாக நிற்றலிலும், தன்னை யாட்கொள்ளும் பொருட்டாக வில்லிபுத்தூரில் கோயில்கொண் டெழுந்தருளிய வடபெருங்கோயிலுடையானிடத்துத் தன்னை மறந்துசென்ற சிந்தையளாதலிலும் தன் நாட்களைச் செலவிட்டு வந்தாள். தன்மகளுக்குப் பக்தியை வளர்த்தற்குரிய விஷயங்களைப் போதித்து வந்த ஆழ்வாரின் நினைவைப்போன்றே ஆண்டாளின் நினைவும் திருமாலின் சேவடிச்சென்று தங்குவதாயிற்று.

பெற்றவர், ஆண்டாளுக்குக் கற்பித்தனவும், அவளுடைய மனம் திருமாலின் அடிச்சென்று உறைவதற்குக் காரணமாயின. ஆண்டாளின் தாய் தந்தையர், அவள் பிறந்தது தொடங்கி யவளைச் சீராட்டும் பொழுதிலும், ஏனைப்பொழுதிலும் திருமாலின் பெருமையையே விளக்கும் பாடல்களையும் சரித்திரங்களையுமே அவள் கேட்கப் பாடியும், சொல்லியும், அவளைச் சீராட்டியும், துயில்வித்தும் வந்தனர். அவர் உரைத்தவற்றுள் அறம் வளரவும் மறம் தேயவும் உலகத்தில் வந்தவதரித்து உலகத்தை உய்வித்த ஸ்ரீராமகிருஷ்ணாதி அவதாரங்களின் பெருமைகளும், அவ்வவதாரங்களில் நிகழ்ந்தனவும் ஆண்டாளின் மனத்தைவிட்டகலாவாயின. ஸ்ரீ ராமபிரான், தன்னைநோக்கித் தவங்கிடந்த ஸ்ரீ ஜானகிப்பிராட்டியாரை, அயனுறைவிடஞ்சென்று மணந்ததையும், ஸ்ரீ குகப்பெருமானை வேடுவன் என்றும் ஓடமோட்டி என்றும் கருதாமலே அவனோடு தோழமை கொண்டதையும், தன்னையே சரணகவடுத்த ஸ்ரீ விபீஷணாழ்வானுக்கு அபயமளித்ததையும் ஆண்டாள் நினைந்துநினைந்து உளம் மகிழ்வாள்; உடல் பூரிப்பாள். மேலும் அவள், ஸ்ரீ கிருஷ்ணவதாரத்தில் யசோதையின் மைந்தன், தன்னை மணக்கத் தூதனுப்பிய ஸ்ரீ ருக்குமணிப்பிராட்டியாரை மணந்ததையும், தன்னையன்றித் துணைகாணாது சரண்புகுந்த திரௌபதிக்கு ராஜசபையில் நேர்ந்த அவமானத்தை நீக்கியதையும், அடுத்தடுத்துச் சொல்லிச் சொல்லிப் புகழ்வாள்; மனம் மகிழ்வாள். இந்நிலையில் நின்ற ஆண்டாள், இன்னான், இனியான் என்று பாராதே அடைந்தாருடைய குறையை நீக்கித் தனக்கான பெருமையைத் தந்தளிக்கும் தயாளமூர்த்திக்கு ஆட்படாதவராய் மக்கள், தம்மையொத்த மனிதரை இறைஞ்சி வீணே உழன்று திரிதலை நினைத்து நினைத்து மனமழியத் தொடங்கினள்.

தம் அனுபவத்தை எவரும் அனுபவித்தலை விரும்பிய ஆழ்வாரின் தன்மையையே அடைந்த ஆண்டாள், தனது மனத்தைத் தன்னுடைய பொன்னடியிற் பிணித்தருளிய பெருமானின் பெருமைகளை நினைக்கத் தனக்குண்டாகும் ஆனந்தம், மற்றவர்க்கும் உண்டாதல் வேண்டுமென்று விரும்பினாள். ஆண்டாளின், அகத்திலெழுந்த இவ்விருப்பத்தை, அவளுடைய முகமும், செயலும் மற்றவர் எவரும் அறியக் காட்டின. மழலைமொழி பேசும் இளங்குழந்தை, தாய் பிரிவின் வாடியும், அவள் கூடின் காலிற் கிடந்த கிண்கிணி சப்திக்க, தந்தவரிசை சிறிதுவிளங்க முறுவலித்த முகத்தோடு இருமலர்க் கைகளையும் பரப்பித் தாயின் முகத்தையே பார்த்தவண்ணம் தரையை நோக்குதலின்றித் தளர்நடையிட்டுப் பாய்ந்து மகிழ்ச்சியோடுந் தாயைத் தழுவி வாட்டம் தவிர்த்து மகிழ்தலே போன்று, ஆண்டாளும், தன்னன்பிற்குரியராகிய துணைவியர் பிரிவின் மனமுடைந்தும், கூடின் காலிற்கட்டிய சிலம்பு ஒலிப்பச் செந்துவர்வாயினிடத்துச் செக்கர்வானத்துப் பிறை எனத் தந்த வரிசை விளங்கப் புன்முறுவல் செய்து, அவரைத் தழுவநினைக்கும் தன்

மனத்திலும் முந்திச் செல்லும் இருகைகளாலும் ஆவல்தோன்ற அவர்களைத் தழுவியும் மகிழ்ச்சியடைவாள். அங்ஙனம் ஆண்டாளும், அவள் துணைவியரும் ஒருவரையொருவர் காணும்போதெல்லாம் எல்லோரும் ஒருமனப்பட்டு எம்பிரானின் உயர்ந்த குணங்களைத் துதித்து எக்களிப்பர்; தமக்குரிய வெப்பொருளும் எழிலார் திருமார்பனுக்கே ஏற்கும் ஏற்கும் என்பர். இவ்வாறு அளவளாவும் ஆண்டாள் உள்ளிட்டாரனைவரும், தாமும், பிறரும், மற்றையவும் திருமாலின் உடைமையென்றும், எவையும், தம்மடியாரடையும் இன்பங்கண்டு இன்புறுவானுக்கு உரியனவென்றும், அவனே ஸ்வாமியாவன் (உடையவன்) என்றும் அறிவாராயினர். அனைவரும், அவரவர் அறிவு அறிந்தவகையிலெல்லாம் ஆயிரம் பணமுடியையுடைய அனந்தன்மீது அறிதுயிலமரும் அரங்கநகருடையானின் அலகில் விளையாடல்களை நினைந்தும், சொல்லியும், அவன்கோயில் சென்று தொழுதும் வருவாராயினர். அன்றியும் அவர்கள், தம்முள் எதிரெதிர் நின்று ஸ்ரீராமகிருஷ்ணாதி அவதாரங்களின் குணங்களைக் குறித்துப் பாடியும், ஸர்வேஸ்வரனைக் காணவேண்டுமென்று தேடியும், அவனைக் கண்டும் புகழ்வாராயினர்.

(தொடரும்.) N. திருவேங்கடத்தையங்கார்.



# ஞானப்பகுதி.

(413-ம் பக்கத் தொடர்ச்சி.)

## வேதாந்த சாரசங்கிரக வசனம்.

### (தனத்தால் விளைவது தீமையே யென்பதை விவரிக்கிறார்.)

ஒருவனிடம், தனம் மிகுதியாகச் சேரச்சேர மதமும் மிகுதியாய்க்கொண்டேயிருக்கும். மதம் மிகுந்தால் தேகாத்ம பேத ஞானம் குறையும். அதனால் நித்தியவஸ்து இன்னது அநித்திய வஸ்து இன்னது எனப் பகுத்தறிதலாகிய விவேகம் நசிக்கும். விவேகம் நசிப்பதால் உண்டாகும் பலன் இன்னதென்று சொல்லவும் வேண்டுமா. மூடர்களிதையறியாமல் தனமே சுகத்தைக் கொடுக்கின்றதெனக் கருதி, ஆசையாகிய பிசாசினால் உறுதியாய்ப் பிடிக்கப்பட்டவர்களாய், எப்பொழுதும் பூதம்போல் பணத்தைக் கண்ணால் பார்த்துக்கொண்டு அதன் சமீபத்திலே யிருக்கின்றனர். செல்வமுள்ளவன் பணத்தைத் தவிர வேறொன்றையும் பார்ப்பதில்லை. பிற வஸ்துக்களைப் பார்க்கும் விஷயத்தில் அவன் குருடனாயிருப்பான். அநேக அயோக்கியர்கள் அவனைச் சூழவிருந்து இதம் பேசிக்கொண்டிருப்பர். அவர்களால் தூண்டப்பட்டுப் பெரியோர்களால் நிந்திக்கப்பட்ட தீ நெறிகளிற் சென்று உழன்று மீளா நரகிற்காளாகிறான். குருடனாகையால், இவனுக்குத் தான்

செல்வது குமார்க்கமென்று தெரிவதில்லை. அந்தக் குருட்டுத்தன்மையைப் போக்குவதற்குத் தரித்திரமே சிறந்த மருந்தாகும். ("பெருத்திடுசெல்வமாம் பிணிவந்துற்றிடில் - உருத்தெரியாமலே ஒளி மழுங்கிடும் - மருத்துளதோ வெனில் வாகடத்திலை - தரித்திரமென்னுமோர் மருந்திற்றீருமே.

சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுளார் மூக ராவர்
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவர்
குறிபெறு கண்ணு ளாரும் குருடராய் முடிவரன்றே"

என்றின்னோரன்ன ஆன்றோர் மொழிகளையும் நோக்குக.)

தவிர, செல்வமானது ஆசை, கோபம், இடம்பம், மதம், மாற்சரியம் முதலிய துர்க்குணங்களையே யுண்டாக்குமன்றி, சித்தசுத்தியை யுண்டாக்குவதில்லை. தனத்திற்கு விரயம் நேரிட்டால் பணமில்லாமல் ஏழையாயிருந்த காலத்தில் இருந்த துன்பத்தைக்காட்டிலும் இருமடங்கு துன்பமுண்டாகும். நஷ்டமுண்டானால் அதினும் மும்மடங்கு துக்கமுண்டாகும். (பிறவிக்குருடன் துன்பத்தினும், பெற்று மீண்டு மிழந்தவனுடைய துக்கம் மிகுந்ததல்லவா?) எங்கே விரயமாய் விடுகிறதோ, எங்கே நஷ்டமுண்டாய்விடுகிறதோ என்னும் பயமும் பணமுள்ளவனை விட்டகல்வதில்லை. ஆகையால் பாம்பு வாசஞ்செய்யும் வீட்டில் குடியிருப்பவனுடைய மனமானது எப்படிச் சாந்தியின்றிச் சதா பயத்தோடு கூடியதாய் அல்லலுற்றலைந்துகொண்டிருக்குமோ, அதுபோலவே பணம்படைத்தவனுடைய மனமும் சாந்தியற்றுழன்றுகொண்டிருக்கும்.

பணமில்லாதவன் நிர்ப்பயமாய் எங்குஞ் சஞ்சரிக்கலாம். அவன் நிர்மானுஷ்யமான காட்டிலிருந்தாலும் சரி, கிராமத்திலிருந்தாலும் சரி, கடலிலிருந்தாலும் சரி, வேறெவ்விடத்திலிருந்தாலும் சரி, அவன் பயப்படவேண்டியதில்லை. சாந்த சித்தத்துடன் சுகமாயிருப்பான். (மடியில் கனமிருந்தாலல்லவோ வழியில் பயமுண்டாகும்!) பணமுள்ளவனோ, எப்பொழுதும் வியாகுலசித்தனாய், புத்திரனுக்கும் பயப்படுகிறவனாய், கஷ்டப்பட்டுக்கொண்டே யிருப்பான். ஆதலால் இந்தத் தனத்தால் புருஷார்த்த சுத்தியுண்டாவதில்லை. அதற்கு மாறாக அது துன்பத்திற்கே மூலமாயிருக்கிறது. இதுபற்றியே சற்புருஷர்கள் அனுகூலமற்ற சமஸ்தசெல்வங்களையும் விட்டு வனத்தில் வசிக்கின்றனர்.

ஆகையால், கற்புள்ள மனைவியும், தனதான்யாதிகளால் நிறைந்த அலங்காரமாளிகையுமாகிய யாவும் அழியுந்தன்மை யுள்ளவை என்று சுருதி வாக்கியங்களாலும் யுக்திகளாலும் தெரிந்துகொண்டு, புத்திமான்கள் அவற்றை விட்டுவிடுகின்றனர். மற்றவர்களோவென்னில், அவற்றைச் சுகசாதனமெனக் கருதித் துக்கக்கடலில் மூழ்கித் தவிக்கின்றனர்.

சாணிக்குப்பையில் கிடக்கும் கிருமி கீடங்கள் அதுவே சொர்க்கபோகமெனக் கருதி இன்பமாய்க் கிரீடைசெய்துகொண்டிருப்பதுபோல எந்த மனிதர்கள் சுகமுள்ளதென்று மனைவிமக்களிடத்துக் கொண்டுள்ள ஆசையால் சம்சாரக் குப்பையில் கிரீடித்துக்கொண்டிருக்கிறார்களோ, அவர்களுக்கு எப்பொழுதும் நரகவாசத்திலும் கர்ப்பவாசத்திலும் நீங்காத துக்கமே யுண்டாவதன்றி மோக்ஷத்திற்கு மார்க்கமே யுண்டாதலில்லை. எவர்களுக்கு மனைவி மக்கள் தனம் முதலான வஸ்துக்களினிடத்துள்ள ஆசை

நசிக்குமோ அவர்களுக்கே முத்திநெறி நேர்படும். ஏனையோர்க்குக் கிட்டாது.

(எத்தகையோருக்கு ஆசை நசிக்கும் என்பதைக் கூறுகிறார்.)

நிஷ்காமியமாய் சத்கருமங்களைச் செய்து அதனால் பாவம் நசிக்கப்பெற்றவர்களும், வேதாந்த வாக்கியங்களை இடைவிடாது சிரவணஞ் செய்வோரும், சித்தசுத்தி யடைந்தோரும், புத்திமான்களும், இந்த நித்யாநித்ய வஸ்து பரிசீலனையை யுக்தியால் பலமுறை செய்துகொண்டிருப்போரும், அதனால் உண்டான தீவிர வைராக்கியமுடையோரும், மோக்ஷாபேக்ஷை யுள்ளோருமாகிய கிருதகிருத்தியர்களுக்கு மனைவி மக்களாதிய பதார்த்தங்களினிடத்துள்ள ஆசையாகிய கொடியை அறுத்தல் சுலபமாகும். (சம்சார பயமுண்டாகாதிருப்பதற் குபாயம் கூறுகிறார்.) பெண்-நாக்கு-பொன் இம்மூன்றன் மூலமாகவே ஜனன மரணப் பிரவாக (இடைவிடாது மேலும் மேலும் வந்துகொண்டிருத்தல்) வடிவமான சம்சாரமானது உண்டாகின்றது. ஆகலின் இம்மூன்றையும் எவன் நிக்கிரகிக்கின்றானோ அவனுக்குச் சம்சாரபயம் நேரிடுவதில்லை.

(மோக்ஷ லக்ஷ்மியை யடைதற்குரியவ னிவனேன்பதைக் கூறுகின்றார்.)

மோக்ஷ லக்ஷ்மியினுடைய நகரத்திற்கு முதலில் பேதிக்கமுடியாதவாயில் ஒன்றிருக்கின்றது. அந்த வாயிலுக்குப் பொன் பெண் என்னும் இரண்டு கதவங்களுண்டு. அக்கதவுகள் காமமென்னும் பெயரையுடைய தாழ்க்கோலால் உறுதியாய் மூடப்பட்டிருக்கின்றது. எந்தத் தீரன் பொன், பெண், காமமென்னும் அம்மூன்றையும் உடைத்தெறிகிறானோ, அவன் அந்நகரத்திற்குள் பிரவேசித்து, மோக்ஷலக்ஷ்மியின் சுகத்தை யனுபவிப்பான். அந்த மூன்றையும் ஜெயிப்பதெப்படியெனில், விவேகமென்னும் குதிரைமீதேறினவனும் தீவிர வைராக்கியமென்னும் வாளாயுதத்தை யேந்தினவனும் துன்பங்களைச் சகித்தலாகிய கவசத்தைத் தரித்தவனுமாகிய வீரன் பொருள் காமம் என்னும் பகைவரை வெல்லவல்லவனாவான். இவற்றுள்ளும் விவேகத்தாலுண்டான தீவிர வைராக்கியமே மோக்ஷத்திற்கு முதற்காரணமாகுமென்பது சத்புருஷர்களுடைய அபிப்பிராயம். ஆகையால் மோக்ஷாபேக்ஷையுள்ள விவேகியானவன் அவ் வைராக்கியத்தையே முதலில் பிரயத்தினப்பட்டுச் சம்பாதிக்கவேண்டும். அதையடையாதவன் தேகரூபமான பந்தத்தை விட எண்ணுவதற்கு அருகனாகான். ஆகையால் இந்த வைராக்கியமே பந்தநிவர்த்திக்குச் சிறந்த மார்க்கமாகும். இந்த வைராக்கியத்தை யடையாதவர்கள் பண்டிதர்களேயாயினும், மோகத்தை முனிந்து நீக்கமுடியாதவர்களாய் எமலோகத்தில் அனுபவிக்கும் வேதனையைப்போல கிருகத்தில் வாதைப்பட்டுக்கொண்டிருப்பார்கள்.

(இனி மூன்றுஞ் சாதனமாகிய சமாதிஷட்க சம்பத்தி கூறப்படுகின்றது.)

சமம், தமம், திதிக்ஷை, உபரதி, சிரத்தை, சமாதானம் என்னும் இந்த ஆறும் சமாதிஷட்கம் என்னப்படும். இவ்வாறையும் அடைந்திருத்தலே சமாதிஷட்க சம்பத்தியாம். (இவை வேறு நூல்களில் இம்முறை மாறியுமிருக்கும். இவற்றுள் திதிக்ஷையென்பது சகித்தல், உபரதியென்பது விடல்,

கைவல்லியநவநீதத்தில் 'சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை யாரும்' எனவும் விசாரசாகரத்தில் 'சமம், தமம், சிரத்தை, சமாதானம், உபரதி, திதிக்ஷை' எனவும் முறை மாறியிருத்தலுங் காண்க.) இவற்றுள்,

**சமமாவது** :—மனதை விஷயங்களிற் செல்லவிடாது தடுத்து ஒருமுகப்படுத்தி, தன் லக்ஷியத்தினிடத்தில் நியதமாய் நிறுத்துவதே சமமாம். (சமம்-அகக்கரணதண்டம் என்பது கைவல்லியம்.)

இந்த சமம், உத்தமம், மத்திமம், அதமம் என மூன்று வகைப்படும். அவற்றுள்,

(1) உத்தம சமமாவது:—மனமானது சங்கற்ப விகற்பங்களாகிய விகாரங்களை விடுத்து (நினைப்பு மறப்புக்களற்ற நிலையில்) உள்ளது உள்ளபடி பிரஹ்மைக்ய ரூபமாயிருத்தலாம்.

(2) மத்திமசமமாவது:—மனத்தை இடைவிடாமல் பிரம்மஞான ரூபமாகச் செய்தல். இதுவே மனத்தின் சுத்த சத்துவ ரூபமாகும். (மனமானது ஆகாயம் முதலாகிய சூக்ஷ்ம பஞ்சபூதங்களின் சத்துவகுண காரியமாயிருத்தலால் அதனது இயற்கைச் சொரூபம் சத்துவ சொரூபமேயாகும். இராஜச தாமசக் கலப்பினால் சங்கற்பவிகற்பங்களுண்டாயின. அவற்றையொழித்துச் சுத்தசத்துவமாகிய இயற்கை வடிவாக்குதலே மத்திமசமமாகும்.)

(3) அதம சமமாவது:—விஷய வியாபாரங்களை விடுத்து வேதாந்த சிரவணத்தில் மாத்திரம் மனத்தை நிலையாக நிறுத்துதலே மனத்தின் அதம சமமாகும். (இது கலப்புள்ள சத்துவத்தை வடிவாகக் கொண்டுள்ளது.)

(ஈண்டு, பிரஹ்மைக்கிய ரூபமென்பது பாவனுவடிவப் பிரஹ்மமாம். அந்த பாவனுவடிவப் பிரஹ்மரூபமாக நிலைபெறல் உத்தமசமமாம். இதனை **அசாக்ஷாத்கார ஆந்தரநிர்விகற்ப சமாதி** என்றுங் கூறுவர். மனமானது முற்கூறிய பிரம்ம வடிவமாக விளங்காது அந்தப் பிரம்மத்தின் அகண்டாகார விருத்திரூபமாக விளங்குவது மத்திம சமமாம்.

"பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரமமா குவரென்றால்
நரசரீரமாங் குரவனே விசாரமேன் ஞானமே னென்றதே
பரம பாவனை பரோட்சமாம் பின்பந்தப் பரோட்சமே யபரோட்சம்
திரவி சாரமா ஞானமா முத்தியாந் தீர்வையீ தறிவாயே"

என்னும் கைவல்லியச் செய்யுள் ஈண்டுணரற்பாலதாம்.)

இச்சமமானது முன்சாதனமாகிய விராகமும் பிற்சாதனங்களாகிய தமம் முதலானவைகளும் எவர்களுக்கு உளவாகுமோ அவர்களுக்கே சித்திக்கும். எனவே, காமம், குரோதம், உலோபம், மதம், மோகம், மாற்சரியம் என்னும் இவ்வாறும் எவனால் ஜெயிக்கப்படுமோ அவனுக்கே சமமானது சித்திக்கும். அவற்றை ஜெயிக்காதவனுக்கு சித்திப்பதில்லை. எவன் தீவிரமான மோக்ஷ வாஞ்சைகொண்டு விஷத்தைப் பார்ப்பதுபோல விஷயாதிகளைக் கண்டு, அவற்றினிடத்துப் புத்தியைச் செலுத்தாமலிருக்கின்றானோ அவனுக்கு சாந்தி யெனப்படுகின்ற இச்சமமானது கைகூடும். எவன் பரமேசுவரனை ஆராதிக்கின்றதில்லையோ, எவனுக்கு குருவின் அனுக்கிரகம் கிடைக்கவில்லையோ, எவனுக்கு மனம் வசப்படவில்லையோ அவனுக்கு சாந்தியுண்டாகாது.

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

# மாணவர் பகுதி.

## ஆத்திசூடி உதாரணக்கதைகள்.

(416-ம் பக்கத் தொடர்ச்சி.)

### "கிழமைப்பட வாழ்"

"கிழமைப்பட—(மனிதனே உன்னிடத்தில் உள்ளபொருள், மற்றையர்க்கும்) உரிமையாகும்படி, வாழ்—(நீ பிறர்க்கும் அதனைக் கொடுத்து) வாழ்வாயாக" என்பது இதன்பொருள்.

மனிதராய்ப் பிறந்தவர்கள், தம்மைச்சார்ந்தவர்க்கு வறுமைத் துன்பம் நேர்ந்தால் அது தீரும்படி தம் பொருளைப் பங்கிட்டுக் கொடுத்து வாழ வேண்டும். அப்படி வாழ்வோரே இவ்வுலகில் சிறப்படைவார்கள். அவ்வாறு ஈகையில்லாமல் வாழ்பவர்கள் தம்முடைய வாழ்வுகெட்டு வருந்துவர். அதனை, அடியில்வரும் கதை விளக்கும்:

முன் ஒருகாலத்தில் செம்பியனூர் என்னும் கிராமத்தில் தாண்டவன் என்னும் ஒரு மனிதன் இருந்தான்; இவன் மிகுந்த பேராசைக்காரன்; காசோடு காசு சேர்ப்பதிலேயே நோக்கமுடையவன்; ஏழைகளுக்கு இம்மியரிசியும் கொடுக்கமாட்டான்; பிச்சைக்காரரைக்கண்டால் பேரிடிபோல பேசித் துரத்துவான்; தன்னுடைய நெருங்கிய உறவினர்க்கும் ஒன்றும் கொடுக்கமாட்டான். இவன், தன் சொந்தச் சாப்பாட்டுக்கும் அதிகப் பணம் செலவு செய்யமாட்டான். ஒவ்வொருவேளையிலும் கால்வயிறு குறைவாகவே அன்னமுண்பான்; விருந்ினரைக்கண்டால் வேகமாய்க் கதவை மூடிவிடுவான்.

இவன் இவ்வாறு உலோபகுணத்திற்சிறந்த கையழுத்தக்காரனு யிருந்தபடியால் இவன்மீது ஊராரெல்லோரும் வெறுப்பும், விரோதமுங் கொண்டிருந்தார்கள். இவனிடத்தில் முன்னோர்கள் தேடிவைத்த பணம் கொஞ்சமிருந்தது. அதைக்கொண்டு வேறு தொழில்கள் செய்தால் அதிகப்பணம் சேராதென்று இவன் கருதி, பணம் வாங்க விரும்புவோரிடம் நகைகளை அடைவு வாங்கிக்கொண்டு வட்டிக்குக் கடன்கொடுக்கும் வியாபாரத்தைச் செய்யத்தொடங்கினன். அனியாயமாக ஒரு ரூபாய்க்கு ஒருநாளைக்கு இரண்டணு வட்டிவாங்கி ஏழைகளின் பணங்களையெல்லாம் எளிதாகச் சேர்த்து வந்தான். தினப்படி சிறு வியாபாரம் செய்து ஜீவிக்கும் ஏழைகளுக்குக் காலையில் கடன்கொடுத்து மாலையில் வட்டியும் முதலும் அவர்களிடம் வாங்கி விடுவான். நகைகளின்பேரில் பிறருக்குக் கொடுக்கும் பணத்திற்கு வட்டி பெருக்கி அதிகத்தொகையாக்கி அவர்கள் அத்தொகையைக்கட்டி நகையை மீட்கச் சக்தியற்றவர்களாய்ப் போகும்படி செய்து முடிவில் அந்நகைகளை

அக்கடனுக்கே எடுத்துக்கொள்வான். இவனிடம் வட்டிக்குப் பணம் வாங்கிக் கெட்ட குடும்பம் அநேகம்.

இவன் இவ்வாறு சேர்த்துவரும் பணங்களையும், நகைகளையும், பிறரிடம் அடைவுவாங்கும் நகைகளையும் பெட்டியில் வைத்தாலும், சட்டியில் வைத்தாலும் திருடர் அபகரித்துக்கொள்வார்கள் என்று நினைத்துத் தினந்தோறும் இரவில் ஒரு பெரிய பாண்டத்திற்போட்டுச் சட்டியால் மூடித் தன்னுடைய உள்வீட்டின் நடுவில் பூமியைத்தோண்டிப் புதைத்துவைத்து மறுநாள் விடிந்தபின் எடுத்துக்கொள்ளும் வழக்கத்தைமேற்கொண்டிருந்தான்.

இதை இவன் இரகசியமாகவே செய்துவந்தான். இவன் எல்லோருக்கும் விரோதியாயிருந்தபடியால் சில திருடர்கள், இவனுடைய பொருள்களைக் களவாடிக்கொண்டு போய்விடவேண்டுமென்று பன்முறைகள் முயற்சி செய்து கன்னம் வைத்து வீட்டிற்குட்புகுந்து பார்த்தும் இவன் பணம் புதைக்குமிடத்தைக் காணமுடியவில்லை. முடிவில் ஒரு சாமார்த்தியத் திருடன் எப்படியாவது இவன் பணம் வைக்குமிடத்தைக் காணவேண்டுமென்று ஒரு நாள் இரவில் தாண்டவன் பணம் புதைக்கும் அறைவீட்டின் பின்பக்கத்தில் வந்து சுவரில் ஆக்கர்போட்டுச் சிறுதுவாரம்செய்துவைத்துவிட்டு அங்கேயே உட்கார்ந்திருந்தான். இருட்டானசமயத்தில் அந்தப்பக்கம் எவரும் போக மாட்டார்கள். ஆதலால் அவன் அச்சமின்றியிருந்தான். இரவு எட்டுமணிக்கு மேல் தாண்டவன் கடையைப் பூட்டிவிட்டுத் தன்னிடமிருந்த நகைகள், பணம் எல்லாவற்றையும் கொண்டுவந்து அவ்வீட்டைத்திறந்து விளக்கேற்றி வைத்துக்கொண்டு பள்ளந்தோண்டிப் புதைத்தான். திருடன் துவாரத்தின் வழியாகப்பார்த்து இவனுடைய இரகசியத்தைத் தெரிந்துகொண்டான். தாண்டவன் அறையைப் பூட்டிவிட்டான். ஊரொடுங்கியபின் திருடன் சுவரில் கன்னம்வைத்து உட்புகுந்து, தாண்டவன் மண்ணைத் தோண்டி மறைத்த பொருள்களையெல்லாம் கொண்டுபோய்விட்டான். தாண்டவனிடத்தில் ஒரு பைசாகூட இல்லாமல் எல்லாம் தொலைந்துவிட்டன.

விடிந்தவுடன் தாண்டவன் மண்ணைத்தோண்டிப் பார்த்தான்; ஒன்றும் அகப்படவில்லை; "ஐயோ! எல்லாம் தொலைந்தனவே" என்று கதறினான். நகைகள் அடைவுவைத்தவர்களெல்லாம் பணத்துடன் ஓடிவந்து அவனிடம், "எங்கள் நகைகளைக் கொடு" என்று நெருக்கடிபண்ணினார்கள். அவன் அவர்களுக்குப் பதில் சொல்லமுடியாமலும், ஜீவனஞ் செய்ய வேறுமார்க்கமின்றியும் பூனைபோல் விழித்தான். அந்த உலோபிக்கு எவரும் உதவி செய்ய முன் வரவில்லை. அதனால் தாண்டவன் தீராத சஞ்சலத்திற்சிக்கி மாண்டவனாயினான்.

(தொடரும்.) செம்பூர். வீ-ஆறுமுகஞ்சேர்வை.

---

## சன்மார்க்கத்துக்கேற்ற சற்போதங்கள்.

(416-ம் பக்கத் தொடர்ச்சி.)

கொல்லா விரதம் நல்லது யார்க்கும்
கோப முடையோர் சாபந் தேடுவர்
சற்சனர் சங்கம் நற்றுணை புரியும்
சாதிக் கொடுமை பேதமுண் டாக்கும்

சிவனை வணங்கிற் பவமணு காது
சீதன வழக்கம் வேதனை விளைக்கும்
சுகத்தை விரும்பின் அகத்தைத் திருத்து
சூதில் விருப்பம் தீது பெருக்கும்
செல்வத்திற் றூயது கல்வியின் கண்ணியம்
சேயிலும் மேலது கோயிலென் றெண்ணு
சையெனத் திரிதல் வைதிடச்செய்யும்
சொல் செயல் சிந்தனை எல்லாங் கவனி
சோம்ப லுடையவர் மேம்பட மாட்டார்
தன்னயங் கருதுதல் இன்னலைக் கூட்டும்
தாயை மறப்பவர் தீயவ ராவார்
திருமகள் சேரின் பெருமைகள் சாரும்
தீமைசெய் களவு தூய்மை தொலைக்கும்
துஷ்டர் சேர்க்கை நஷ்டம் விளைக்கும்
தூக்கம் கடன்பட ஊக்கம் கொடுக்கும்
தெய்வர் தொழுபவர் எய்துவர் நற்கதி
தேகங் காப்பவர் போகங் குறைப்பர்
தையல்சொற் கேட்பவர் உய்வ தசாத்தியம்
தொல்லை தருபவை எல்லாந் தவிர்

(தொடரும்.) **கா. சின்னப்பா**, யாழ்ப்பாணம்.

---

## நல்லுரைத் திரட்டு.

(417-ம் பக்கத்தொடர்ச்சி.)

(160) அன்னையை நேசிப்பது போன்று தமது நாட்டை நேசிப்போர் "தேசாபிமானிகள்." (161) பிறமாதரைத் தமது உடன் பிறந்த சகோதரிகள் போலவும், தம்மைப்பெற்ற தாய்மார்கள் போலவும் மதித்து, அதன்படியே அகத்திலும், புறத்திலும் காட்டுவோரே ஆன்ம ஞானம் கைவரப் பெற்ற அறிஞர். (162) உண்மையான வீரன், அரசரிடத்தும், மெலியாரிடத்தும் அழுந்தத் திருத்தமாயும், நடுவுநிலை தவறாமலும் உரையாடுவான். (163) ஒருவர் செய்த தீமையை மறப்போர் "ஞானிகள்." (164) வயிற்றுப் பிழைப்புக்கெனக் கல்வி பயிலல் அறியாமையாகும். (165) உலகை நிச்சயமென்றிருக்கும் அறியாமையினின்று நீங்கினவர்களே தீத்தாராவர். (166) உலகிலுள்ள புரட்டுக்களினின்று விடுபடுவோர் மிகச் சிலரிலும் சிலரேயாவர்; புரட்டுக்களினின்று விடுபடற்கு "மதிமோசவிளக்கம்," பத்திரிகைகள் முதலியன பெரிதும் துணைபுரிய வல்லனவாகும். (167) வாயில்லா உயிர்களை (பறவை, விலங்கு முதலியனவற்றை வாயுள்ள உயிர்கள் (மனிதர்) கத்தி, துப்பாக்கி ஆதிய ஆயுதங்களால் கொன்று இன்புறல் பெரும் அறியாமையாகும். (168) மனித வாழ்வுக்கிலக்கியர் மகாத்மா காந்தியடிகள்; எங்ஙனம் என்பதை அறிய விழைவோர், பேரறிஞர் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் எழுதிய "மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்" என்ற நூலைப்பெற்றுத் தெளிவாராக. (169) நாம் உண்மையான நண்பரைப்பெற விழைந்தால், முதலில் நாமே அப்

படி நடந்துகொள்ளவேண்டும்; அதனுல் அவரைப் பெறலாம். (170) "தமிழ்" மொழியாய எனது தாய்மொழி, மற்றமொழிகளைவிட எத்துணையோ அளவு உயரியது; சிலர், ஓசை யினிமையில்லாதது எனக் கூறுகின்றனர்; ஆம் இருக்கலாம்; ஓசை யினிமை படைத்த மொழிகளான் உயிருக்கே தீங்கு விளைவதை அந்த மேதாவிகள் உணரார் போலும்! யான் தமிழ் மொழிக்கு ஓசையினிமை யில்லாமைக்குச் சிறிதும் வருந்தேன் பெருமகிழ்ச்சியும் பெருமையுமே அடைவேன்.

(தொடரும்.) திரு. வீ. மு. பொன்னையா.

---

## பொன்செய்யும் மருந்து.

சிறுவர்களே! நீங்கள் அநேக மருந்துகளைபற்றிக் கேட்டிருப்பீர்கள். ஆனுல் இம்மருந்து உங்களுக்குத் தெரியாது என்றே நினைக்கிறேன். அதைச் சொல்கிறேன் கேளுங்கள்.

ஓர் பட்டணத்தில் பெரிய பணக்காரன் ஒருவன் இருந்தான். அவனுக்கு அதிகச் செல்வம் இருந்தது. ஆனுலும் அவன் மேலும் மேலும் பணம் தேடிக் கொண்டே யிருந்தான். எவ்வளவு பணம் சேர்ந்தாலும் இன்னும் பணம் சேர்க்கவேண்டும் என்ற ஆசையே அவனுக்கு இருந்தது. அதனுல் அவன் அநேக வியாபாரங்கள் செய்தான். பணமும் அதிகமாகிக்கொண்டே வந்தது. ஆயினும் அவனுடைய ஆசை தீரவில்லை.

ஒருநாள் அவன் வீட்டிற்கு ஒரு சந்நியாசி வந்தார். அவன் அவரை வரவேற்று சாஷ்டாங்கமாய் (அதாவது கீழேவிழுந்து) நமஸ்கரித்து ஆசனங் கொடுத்து உட்காரச் செய்தான். அவர் அப்பிரபுவின் யோக க்ஷேமங்களை விசாரித்தார். அப்பொழுது தனிகன் "ஸ்வாமீ! எனக்கு இன்னும் மிகுந்த செல்வம் உண்டாகும்படி அநுக்ரகம் செய்யவேண்டும்" என்று கேட்டான். அதற்கு அவர் "அப்பா! இப்பட்டணத்தின் பக்கத்தில் உள்ள ஒரு கிராமத்தில் ஒருவனுக்குப் பொன்செய்யும் மருந்து தெரியும். நீ அவனிடம்போய் அதைத் தெரிந்துகொள். பிறகு நீ மிகுந்த செல்வவான் ஆகிவிடுவாய்" என்ருர்.

"ஸ்வாமி! அவன் யார்? அவனை நான் எப்படித் தெரிந்து கொள்வது?" என்று கேட்டான் தனிகன்.

"உனக்கு ஒரு பொன்தாமரைப்பூத் தருகிறேன். அது எவன் கைபட்டவுடன் வெகுதூரத்துக்கு நல்ல வாசனைவீச ஆரம்பிக்கிறதோ அவனே நீ தேடும் மனிதன். அவன் சொற்படி நடந்து அதைத் தெரிந்துகொள்" என்ருர் சந்நியாசி.

தனிகன் சந்தோஷத்துடன் அந்தத் தாமரை மலரை வாங்கிக்கொண்டு சந்நியாசியை அனுப்பிவிட்டான். உடனே பணக்காரன் அந்த (பொன் செய்யும் மருந்து வைத்திருக்கும்) மனிதனை எப்படிக் கண்டு பிடிப்பது என்று யோசனை செய்தான். கடைசியில் அவனுக்கு ஒருயுக்தி தோன்றிற்று. உடனே அவன் அப்பட்டினத்திலும் சுற்றியுள்ள கிராமங்களிலும் "என்னிடமுள்ள தங்கத்தாமரைமலரை யார் வாசனையுள்ளதாகச் செய்கிருர்களோ அவர்களுக்குப் பதினுயிரம் ரூபாய் பரிசுகொடுப்பேன்" என்று பறையறைவித்தான்.

இதைக்கேட்டு அநேக மந்திரவாதிகள் வந்தார்கள். பல வைத்தியர்கள் வந்தார்கள். ஆனுல் ஒருவராலும் அந்தத் தாமரைப் புஷ்பத்திற்கு வாசனை

யுண்டாக்க முடியவில்லை. ஆகையால் தனிகன் வெகு ஜனங்களை வரவழைத்து ஒவ்வொருவர் கையிலும் கொடுத்துப் பார்த்தான். அப்பொழுதும் அந்தப் புஷ்பம் முன்போலவே இருந்தது. ஆகையால் அவன் தன் பல்லக்கில் ஏறிக் கொண்டு அடுத்த கிராமங்களுக்குச்சென்று ஒவ்வொருவரையும் தொடச் செய்தான். அப்பொழுதும் அது மணக்கவில்லை. ஆகையினாலே அவன் மனம் சலித்து வீடுவந்து சேர்ந்தான்.

அவனிடம் அநேக வேலைக்காரர்கள் இருந்தார்கள். அவர்களை அத்தன வான் நினைக்கவேயில்லை. அவனுடைய தோட்டத்தில் சுகுணன் என்னும் ஒரு குடியானவன் வேலைசெய்துகொண்டிருந்தான். அவன் ஒருநாள் சில ரோஜாப்புஷ்பங்களை எடுத்துக்கொண்டு பிரபுவினிடம் கொடுக்கவந்தான். அப்பொழுது பிரபு வெளியே போயிருந்தான். ஆயினும் அப்பிரபு வழக்க மாய் இருக்கும் அறை திறந்திருந்தது. பிரபு உள்ளே இருக்கிறாரென்று நினைத்து சுகுணன் அறைக்குள் நுழைந்தான். எதிரில் ஒரு பீடத்தில் பொன் தாமரை மலர் இருந்தது. அது மிகவும் அழகா யிருந்தது. உண்மைத் தாமரைபோ லிருந்தது. அவன் அதைப் பார்த்ததும் "இவ்வளவு அழகான புஷ்பமும் இருக்கிறதா" என்று நினைத்தான். அதைக் கையில் எடுத்துப் பார்க்கவேண்டுமென்று அவனுக்கு அதிக ஆவல் உண்டாயிற்று. தன்னை யறியாமலே அவன் அதைச் சட்டென் றெடுத்தான். உடனே என்ன ஆச்சரி யம்! அந்த மலரிலிருந்து அதிகமான வாசனைவீச ஆரம்பித்து அது வீடுமுழு வதும் பரவிற்று.

(தொடரும்.) D. R. ஸ்ரீநிவாஸ அய்யங்கார், தேவகோட்டை.

## பெண்மக்கள் பகுதி.

### மாதரும் குடும்பமும்.

(373-ம் பக்கத் தொடர்ச்சி.)

தீநெறியில் வரும்பொருள், வருங்காலத்தில் எளிதிற் கிடைப்பதாகக் காணப்படினும் முடிவில், புது வெள்ளம்வந்து பழைய வெள்ளத்தை யும் கொண்டுபோனதென்னும் பழமொழிபோல், முன்னிருந்ததையும் கெடுத்துவிட்டு இருந்தவிடமும் தோன்றாதபடி அழிந்தொழியும். அத் தகைப் பொருளைக்கொண்டு செய்யும் தானதருமங்களும் பயன்தருதலில்லை. அதன்பயன் பொருளுடையாரையே சாரும். உலகத்தில் எத்தனையோ பேர் அக்கிரமமான வழியிற் பொருளைச் சம்பாதித்து அந்தப்பாவம் தங்க ளைச் சாராதபடி மேலும் மேலும் அப்படியே பணம் வந்துகொண்டிருக்க வேண்டுமென்று ஆலயங்களிற் சென்று பல கைங்கரியங்களைச் செய்தலும், உற்சவாதிகள் செய்தலுமா யிருக்கக் காணலாம். இது பரிதானம் (லஞ்சம்) வாங்கும் உத்தியோகஸ்தனொருவன் தன்மேலதிகாரிக்குச் சிறிது பொருள் கொடுத்துத் தன் குற்றத்தை மன்னிக்கும்படியும் இனியும் அவ்வாறே செய்து வர உத்தரவு தரும்படியும் கேட்பதுபோலிருக்கின்றது. இந்த நிலையில் இவர் கள் ஆண்டவனை எவ்வளவு இழிவானவராகப் பாவிக்கின்றனர்! இது என்ன அறியாமை. கடவுளைத் தங்களைவிடப் பெரிய மூடரென்று நினைத்துவிட்ட னர்போலும். அன்னாரது செய்கையைக் கண்டு கடவுள் சிரித்துக்கொண் டிருக்கின்றனரென்பதை இவர்களறிவதில்லை.

அன்னியரிடமிருந்து அநியாய மார்க்கத்தில் சம்பாதித்த சொத்தை அனுபவிப்போரும் உருப்படுவதில்லை. மருந்துங்கையுமா யிருக்கும்படி அன்னூர் வீட்டில் பல கொடிய நோய்கள் தாண்டவமாடிக்கொண்டிருக்கும். பல தீமைகள் நேரும். இதுபற்றியே 'தீவினை விட்டீட்டல் பொருள்' என்றார் ஔதாட்டியார். ஆதலால், நன்மார்க்கத்தில் வந்த பொருளைப் பிறர்க்கும் தமக்கும் உபயோகப்படுமாறு செய்தல்வேண்டும். பிறர்க்கு உபயோகிக்க வேண்டுமென்பதைச் சொல்வது நியாயமானதுதான்; தமக்கும் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்பதையுமா சொல்லவேண்டும்? எனின், 'உண்ணான் ஒளி நிறான்' என்பதுபோல், தமக்கும் பயன்படுத்திக்கொள்ளாது பூதம் போல் பணத்தைக் காத்துக்கொண்டிருக்கும் புண்ணியர்கள் பலரிருக்கின்றமையின் இவ்வாறு சொல்வது அவசியமேயாகும்.

இல்லறத்தி லிருப்போன், பிரம்மசாரி வானப்பிரஸ்தன் சன்னியாசி வறியோர் சுற்றத்தார் முதலாயினோரைத் தன் சக்திக்கேற்றபடி அன்னவஸ்திராதிகளளித்து ஆதரிக்கக் கடமைப்பட்டிருக்கின்றான். தன் வருவாயில் கால் பாகத்தை தருமத்தில் செலவிடவேண்டுமென்பது முன்னோர் மொழி. அதன்படி அவ்வளவு விநியோகஞ் செய்யாவிடினும் இயன்றவரையில் சிறிதளவேனும் செலவிடுதல் அத்தியாவசியமாகும். 'செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்' 'ஒக்கல் துன்புறத் தனியிருந்து வாழ்குநர்-மக்களுட் பதடியென்றுரைக்கும் வையமே' என்று கூறும் ஆன்றோரது நீதிமொழிகளைக் கூர்ந்து நோக்குமிடத்து,

> "இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி
> வேளாண்மை செய்தற் பொருட்டு"

என்னும் மறைமொழி வலியுறுத்தப்படுகின்றது. பிறர்க்குபகாரிகளாய் வாழ்வோருடைய வாழ்க்கையானது எக்காலத்தும் தரித்திரத்தாற் பாழ்படுதலில்லை. இதற்குதாரணமாக இதிகாசரத்தினமாகிய மகாபாரதத்திலுள்ள ஓர் கதை ஈண்டு அறியத்தக்கதாம்:

துவாபரயுகத்தில் அந்தணர்பெருமானொருவரிருந்தனர். அவர் மிக்க தருமகுணம் வாய்ந்தவர். தம்மிடத்தில் யார் எதைக்கேட்டாலும் இல்லையென்னாது ஈயும் இயல்புடையார். அக்காலத்தில் பெரும் பஞ்சமொன்றுண்டாயிற்று. மழைவளஞ் சுருங்கியதனால் விளை நிலங்களெல்லாம் வெற்றிடமாகக் கிடந்தன. குடிநீர் கிடைப்பதும் அரிதாயிற்று. மனைவி, மகன், மருமகள் இம்மூவரடங்கிய குடும்பத்தைப் பாதுகாக்க வியலாதவராய்ப் பரிதபித்தனர் அவ்வந்தணர். மூன்று நாட்கள் வரையில் அன்னமின்றி அரும் பட்டினி கிடந்தனர் அவர்களனைவரும். என்ன செய்வார் மறையவர்? பல விடங்களிலுஞ் சென்றலைந்து சிறிது தானியங் கிடைக்கப்பெற்றனர். கிடைத்த அதை வறுத்து மாவாக்கிப் பிசைந்து தலைக்குக் கொஞ்சம் பங்கிட்டுக்கொண்டு உண்ணத்தொடங்கினர். அதுபொழுது ஏழை அதிதியொருவர் அங்கு வந்திருந்தார். அவர் பசியால் கண்ணிருண்டு நடை தளர்ந்து வயிறு முதுகிலொட்டிக்கிடக்க உடல்வாடி அவர்களை யடைந்து உணவு தருமாறு கேட்டார். அவரது பரிதாப நிலையைக் கண்ட மறையவர் தம் பங்கு மாவை அவர்க்கீந்து உண்ணுமாறு உபசரித்தனர். அதனால் அவர் பசி தணியப்பெறாதவராய்க் கூக்குரலிட்டனர். வேதியர் மனைவி தன் பங்கு மாவையுமீந்தாள். அதனாலும் அவர் பசிநோய் நீங்கவில்லை. அதைக் கண்டு அந்தணர் மகன் தன் பங்கைக் கொடுத்தான். பின்பு மருமகளும் தன் உணவை உண்ணுமாறு கொடுத்து உபசரித்தாள். அந்த நால்வர் பங்கையும் உண்ட

பின்னர் அவர் பசிநீங்கிக் களிப்புற்ருர். அவ்வளவில் தேவர்களிற் சிலர் விமானத்துட னங்குப் போந்து அந்நால்வரையும் தம்முலகிற் கழைத்தேகித் தம் விருந்தினராக்கிக்கொண்டனர்.

"செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு"

என்னும் பொய்யாமொழி பொய்யாமொழியே யன்ருே ?

இதுகாறும் கூறியவாற்ருல் இவ்வியாசத்தின் தொடர்ச்சியில் மனித சமூகமானது தனித்து வாழ்தலின்றிச் சேர்ந்தே வாழ்தற்குரியதென்றும், அக்காரணத்தால் ஒருவர்க்கொருவர் உபகாரிகளாய் வாழக் கடமைப்பட்டவர்களா யிருக்கின்றனரென்றும், மனிதரைப் பல விடங்களிலும் ஆண் பெண் என்னும் பாகுபாடுகளாகப் படைத்த கர்த்தாவின் கருத்து இன்னதென்றும், அவ்விரு பகுப்பினரின் காரிய மின்னதென்றும், இன்னுமிவைபோன்ற பிறவும் பெற்ரும். இனி, இல்லறத்தை நடத்துதற் குரியார் யாவர் என்பதையும் அவர் எங்ஙனம் நடத்தவேண்டுமென்பதையும்பற்றிச் சிறிது ஆராய்வாம்.

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

## அறநெறிப் பகுதி.

ஓம்

### அன்பே மதம்! அன்பே தெய்வம்!

நண்பா! உன் ஜன்மம் தெய்வத்தன்மை பொருந்தியது. ஒவ்வொரு நிமிஷமும் புண்ணியத்தையும் அன்பு ததும்பிய செய்கைகளையும் செய்து நீ மேலே ஒருபடி உயர்ந்து சென்று பகவானுடைய பாதார விந்தத்தைப் பற்றிப் பரமபதமடைவதற்காகவென்று மிக அருமையாக எடுத்த ஜன்மமாகும் உன் ஜன்மம். தெய்வ பூஜை என்பதும் தெய்வத்தின் அருளைப் பெறுவதென்பதும் கேவலம் வெளி வேஷத்தாலல்ல. கோயிலுக்குச் செல்வதாலோ பாலபிஷேகத்தாலோ பாடுவதாலோ ஆகிவிடுவதல்ல.

இதைக்கேள்! சகோதரா! ஆயிரம் நாள் பொய் சொல்லிவந்த ஒருவன் ஒருநாள் சத்தியம் சொன்னுல் ஊரார் நம்புகிருர்களா? நீ ஆயிரம் நாள் ராட்சஸனைப்போலப் பிசாசைப்போல சாட்சாத் சுப்பிரமணியக் கடவுளுக்கு வாகனமாகவும் கொடியாகவும் இருக்கிற ஆட்டையும் கோழியையும் அடித்துத் தின்று வயிற்றை நிரப்பியும், பொய் பேசி அக்கிரமமும் அநியாயமும் செய்துகொண்டும் வந்து ஒரு நாள் கிருத்திகை யன்ருே அமாவாசை யன்ருே ஏகாதசி யன்ருே சஷ்டி யன்ருே பரம யோக்கியன் போல கடவுளிடத்திலே போனுல் அக்கடவுளென்ன ஏமாந்து விடுகிருரோ? "அரசன் அன்று கொல்வான் தெய்வம் நின்று கொல்லும்" என்பதை அறி!

நண்பா! நீ போகிற பாதை கடைசியில் நரகத்தில் பெருந் துயரத்தில் கடவுள் சாபத்தில் உன்னையும் உன் குடும்பத்தையும் சந்ததிகளையும் கொண்டு தள்ளிவிடும். தூரவிலகு, விலகு! இதோ! அன்பு மயமான ராஜபாட்டை இருக்கிறது.

அந்த ராஜபாட்டைக்குள் போவதற்கு எது டிக்கட்டு? இதோ பார்.

1. கடவுள் ஏராளமாய்ச் சிருஷ்டித் திருக்கிற, எதற்கும் ஒருவித தீங்கும் உண்டாகாத மரக்கறிகளையும், கனிகளையும், கிழங்குகளையும், பாலையும், நெய்யையும் நீ உட்கொள்ளவேண்டும்.

2. நீ நல்ல விஷயங்களையும், கடவுளுடைய பெருமையையும், புகழையும், பார்த்தும், கேட்டும், சொல்லியும் அனுபவிக்கவேண்டும்.

3. சகல ஜீவராசிகளுக்கும் உன்னால் ஒருவித தீங்கும் நேராமல் அவற்றைக் காப்பாற்றவேண்டும்.

4. சுத்தசுதேசிய கதர் துணியையும், நீரையும், காற்றையும், வாசனைப் பொருள்களையும், புஷ்பங்களையும் உபயோகித்துவர வேண்டும்.

ஆம், இந்த நான்கையுந்தான் நீ கைப்பற்ற வேண்டும்.

பின், நீ எவற்றை ஒழிக்க வேண்டும்?

1. ஆடு, கோழி, மீன், போன்றவைகளுடைய சதையையும் ரத்தத்தையும் பிசாசைப்போல் தின்று வயிற்றை வளர்த்தல்.

2. கள், கஞ்சா, அபினி போன்றவற்றை உண்டு மதிமயங்கிப் பலங்குன்றி நல்ல நடத்தை தவறிச் சீர் கெடுதல்.

3. பீடி சிகரெட் பிடித்துக் கண்ட இடத்தில் எச்சில் உமிழ்ந்துகொண்டு வாயில் துர்நாற்றம் எழும்படிக்கும் உனது சினேகிதர்களுடைய சவாசம் கெடும் படிக்கும் செய்தல்.

உனது மூன்று ஆபரணங்கள்!

நண்பா! பகவானிடத்தில் பக்தி, ஜனங்களிடம் அன்பு, ஜந்துக்களிடம் இரக்கம் என்ற இம்மூன்று ஆபரணங்களையும் அணிந்து நீ உலகில் ஒரு தேவனைப்போல வாழ்ந்து, பின்னர் கடவுளுடைய அருளுக்குப் பாத்திரமாகி எடுத்த ஜன்மத்தைச் சாபல்யமாக்கிக் கொள்வாயாக.

ஓம், சாந்தி, சாந்தி, சாந்தி!

[இந்தப் பிரசுரம் ஸ்ரீ தென்னிந்தியா ஜீவரட்சா பிரசாரக சபையார் வெளியிட்டதாகும்.]

## விவசாயப் பகுதி.

(419-ம் பக்கத் தொடர்ச்சி.)

### பயிரிடுவோர் கஷ்டம்.

குடிவாரப் பாத்தியதையை அடையும் பயிரிடுவோர்களுக்கு உண்டாகும் கஷ்டங்கள் எவையெனில், ஜலவசதியுள்ள ஊர்களில் அல்லது ஜலம் மிகுந்த பெரிய ஏரிகளின் கீழ் உள்ள நிலங்களில் பயிர் இடுவோர், விளைவில் மேல்வார பாத்தியதை இரண்டுபாகம் போக ஒருபாகத்தைத் தாங்கள் அடைகின்றார்கள். சில கிராமங்களில் வைக்கோலைச் சமபாகமாகப் பங்குசெய்து கொள்ளுகிறார்கள். வைக்கோல்களை, பயிரிடுவோன் பூரணமாக அடையும் பக்ஷத்தில் நிலத்திற்கு எருப்போடவேண்டிய கடமை வகிக்க நேரிடுகின்றது. இது தவிர, அவர் பயிர்செய்யும் காலத்து நிலங்களை ஒழுங்குபெற ஊருடன்

தக்க எருதுகளைக் கொண்டு அந் நிலங்கள் விதை விதைக்கத்தக்க பதமாகும் வரையில் உழுவதற்குச் சுமார் ஏக்கர் ஒன்றுக்கு 24-ஏர்கள் பிடிக்கின்றன. அப்பேர்ப்பட்ட ஒரு ஏக்கரில் பயிரிடுபவர் ஒரு ஏர் மாட்டை வைத்துக்கொண்டும் சுமார் 4-நாள் பரியந்தம் தம்முடன் கூலி ஏர்களையும், மாற்று ஏர்களையும் கொண்டும் உழுகிறார்கள். சாதாரணமாய் ஏர் ஒன்றுக்கு ஆளுடன் குறைந்த கூலி எட்டணு வீதம் வைத்துக்கொண்டாலும் சுமார் 24-ஏருக்கு 12-ரூபாய் செலவாகின்றது. பிறகு விதை முளைகட்டப் பெண் ஆள் 1-க்கு 4-அணு செலவாகின்றது. முளைகட்டிய நெல்லை விதைப்பதற்கு எட்டணுக்கூலி ஆகின்றது; பிறகு அண்டைவெட்டுவதற்கும் எருவைக்கொட்டிப் பரப்புவதற்கும் கூலி ஒரு ரூபாய் ஆகின்றது. பிறகு 1-மாதத்திய பயிர் வளர்ந்தவுடன் களையெடுக்கவேண்டியதற்கு அதாவது பயிருடன் வளர்ந்திருக்கும் புற்களை நிவர்த்திசெய்யக் குறைந்தது பெண் ஆள்கள் 10 பேர் பிடிக்கின்றார்கள். ஆள் ஒன்றுக்குக் குறைந்தகூலி 3-அணு விகிதம் ரூ. 1-14-0 ஆகின்றது. பிறகு இரண்டாந்தடவை அதாவது பயிர் ஏறிய 3-வது மாதம் புல் எடுக்க மீண்டும் ரூ. 1-14-0 செலவாகிறது. பிறகு பயிர்களுக் கேற்றவாறு 5-அல்லது 6-வது மாதங்களில் அறுவடை செய்யுங்காலத்தில் கதிரை அறுக்கக் குறைந்தது 10-ஆள் பிடிக்கின்றார்கள். அவர்க்குக் கூலி ஐந்து ரூபாய் ஆகின்றது. கதிரை அறுத்துக் களத்துமேட்டில் போட்டபிறகு கட்டு அடித்து, வைக்கோலையும் நெல்லையும் வேறுபடுத்திப் போர்கட்ட ஆண் ஆள் பெண் ஆள் உட்படக் கூலியாட்களுக்குக் குறைந்தது 1-8-0 ரூபாய் செலவாகின்றது. இவற்றுடன் சுமார் 6-மாதம் வரையில் பயிர் இடுபவன் ஜலம் பாய்ச்சவும், பயிர்களை அடிக்கடி பார்த்துக்கொண்டிருக்கவும் மாதம் ஒன்றுக்குக் குறைந்தகூலி ஏக்கர் ஒன்றுக்கு ரூ. 5-0-0 விகிதம் பார்த்தாலும் 6-மாதத்திற்கு 30-ரூபாய் ஆகின்றது.

இப்படி இரவுபகலும் 6-மாதம் வரையில் காத்துப் பயிரிடுபவனுக்கு மேற்படி இடத்தில் உற்பத்தியாகும் நெல் வளமாய் விளைந்தால் 2-அல்லது $2\frac{1}{2}$ வண்டிக்கு உற்பத்தியாகும். அதில் மேல்வாரம் போகக் குடிவாரம் முக்கால் அல்லது முக்காலே அரைக்கால் வண்டி கிடைக்கின்றது. அதின் சராசரிமதிப்பு 50-அல்லது 55-ரூபாய் ஆகின்றது. வைக்கோலில் ஏக்கர் ஒன்றுக்கு 30-சுமை விழுக்காடு கிடைக்கின்றது. அதில் மேல்வாரம் போகக் குடிவாரம் 15-சுமை வைக்கோலே. அதன் சராசரி மதிப்பு 5-ரூபாய். ஆக ஏக்கர் ஒன்றுக்கு முதல் போகத்திற்குக் கிடைக்கும் பொருள் ரூபாய் 60-0-0. இத்தகைய வரும்படி சரியான வரும்படி. இது, காலாகாலங்களில் மழை பெய்து ஏரியில் ஜலம் நிறைந்திருக்கும்போது மட்டும் கிடைக்கின்றது. இவ்வாறு பயிரிடுவோனுக்குக் கிடைக்கும் ரூபாய் 60-0-0 ல் செலவாகும் ரூபாய் 55-0-0. லாபம் பார்க்கும்பக்ஷத்தில் அவனுக்கு மாதம் ஒன்று 12-அணு கிடைக்கலாம்.

ஜலத்தட்டினுலும் மழையினுலும் ஒவ்வொரு வருஷத்தில் கஷ்டங்கள் ஏற்பட்டுச் சரியானபடி ஜலமில்லாமையாலும், காலாகாலங்களில் பயிர்களின் மேல் மழை பெய்யாமையாலும் பயிர் உற்பத்தி குறைந்துவிடுகின்றது. அப்போது மேற்சொல்லிய 60-ரூபாய் கிடைக்கவேண்டியதுபோய் 30, 40, ரூபாய் கிடைப்பதுகூட சில சமயங்களில் அருமையாய் விடுகின்றது.

நிற்க, ஒவ்வொரு சமயங்களில் ஜலத்தட்டினுல் கிணறுகளில் இருந்து ஒருமாதம் இரண்டுமாதகாலம் வரையில் கவலை அமர்த்தித் தண்ணீர் இறைக்க வேண்டி வருகின்றது. இப்படி இறைக்கும் பக்ஷத்தில் அதனுல் சுமார் 15-0-0 ரூபாய் இறைப்புக்கூலி ஆய்விடுகின்றது. அதில் பேர்பாதி மேல்

வாரக்காரர் கொடுத்தாலும்,பேர்பாதி குடிவாரக்காரர் கொடுக்கவேண்டியவர் களா யிருக்கிறார்கள்.

இப்படி யிருக்க கொஞ்சமும் லாபம் இல்லாமல் பயிர் இடுபவர்கள் எப்படி ஜீவிக்கின்றார்கள் என்றால், முன் சொல்லிய செலவுகளில் வெளிக்கூலிகளை வைத்துச் செய்வதற்குப் பதிலாகஅவர்கள், தாமே, தம்முடைய மனைவி மக்கள் முதலியவர்களைச் சேர்த்துக்கொண்டு வேலை செய்வதால், அக் கூலிகளை அடைந்து அவைகளைக்கொண்டு கேழ்வரகு வாங்கிக் காலையில் கூழும் இரவில் களியுமாகப் பாகம் செய்து, சொல்ப செலவுகளில் பருப்பு, மிளகு, மிளகாய், எண்ணெய் முதலியன வாங்குவதற்கு ஏதுவில்லாமல், உப்பு கேழ்வரகு ஆகிய இரண்டினாலேயே பசிப்பிணியை அகற்றி அழுக்கடைந்த பழைய கந்தைத் துணிகளைச் சுற்றி உயிர் வாழ்கின்றார்கள்.

நம்மவர்கள் இத்தகைய கஷ்டங்கள் அனுபவித்திருப்பதைக் கவனிப்பாரில்லை. சகலரின் ஜீவாதாரமாய் உள்ள பயிர்த்தொழிலைக் கைக்கொண்டுள்ள இத்தகைய விவசாயிகளின் சுகதுக்கங்களை நமது இராஜாங்கத்தாரும் கவனிப்பது கிடையாது.

இத்தகைய நிலையில் கஷ்டப்படும் விவசாயிகள் யாதொருவழியும் தோன்றாமல் வாழ்நாளைக் கேவலவழியில் கழிக்கின்றார்கள். அன்றியும் சரியான மழையில்லாதகாலங்களில் மேற்சொல்லிய பயிர் ஜீவனத்திற்கு ஏதுவின்றிப் பசியால் வருந்தி அதைச் சகிக்கமுடியாமல் நெட்டால், பினாங், சிங்கப்பூர், மோரிஸ் என்னும் ஊர்களுக்கு ஒப்பந்தக் கூலியாட்களாக வயிறு வளர்க்கச்சென்று மேற்சொன்ன இடஙகளிலும் இதே கஷ்டத்தை அனுபவிக்கின்றார்கள். இவர்கள் கஷ்டங்களை எப்பொழுது கடவுள் நம் அனைவர்களின் மனத்திலும் தோன்றச்செய்து நிவர்த்திப்பதற்கான மார்க்கத்தைக் காட்டுவாரோ அப்பொழுதுதான் நம் தேசம் முன்னேற்றம் அடையும்.

டாக்டர். மே. மாசிலாமணி முதலியார்.

# கைத்தொழிற்பகுதி.

(424-ம் பக்கத் தொடர்ச்சி.)

## சாயத்தொழிலும், கற்பூர உற்பத்தியும்.

ஆடைகளுக்குச் சாயமேற்றுங்கால் சாய உப்பு(Bichromate of Potash), படிக்காரம், ஆக்சாலிக் ஆசிட் (Oxalic Acid) என்னும் திராவகம் ஆகிய இம் மூன்றையும் எந்நிறையில் சேர்க்கவேண்டுமென்பதைத்தான் முக்கியமாகக் கவனிக்கவேண்டும். இக்கலப்பின் அளவு சிறிதுமிகுந்தாலும் அல்லது குறைந்தாலும் சாயம் வெகுகாலம் நீடித்திராது. மரச்சாயவேலை (Wood Dyes)யில் இம்முறை பெரிதும் கவனத்துடன் அனுஷ்டிக்கப்படுகிறது.

ஆட்டுரோமம், சாதாரணமாகவோ அல்லது நெய்யப்பட்டோ, நிறந் தருவதற்குமுன் சற்றும் பற்றில்லாதிருத்தல் மிக்க அவசியம். அவ்வாறு

செய்யாவிடில் கம்பளங்கள் கரடு முரடாயும் சாயம் சீக்கிரத்தில் மங்கிவிடக் கூடியதாயுமிருக்கும். தொழிலாளி சாயமேற்றும்போது அது எத்துணைக் காலம் மங்காமலிருக்குமென்பதை முதல் முதலில் கவனிக்கவேண்டும். இம் முறையில் மங்குதலற்ற சாயத்தைக்கண்டு உபயோகித்தலே பயனுடைத்தாம். அவ்வாறின்றி அஜாக்கிரதையாக இருந்துவிடின் தொழில் நடத்துபவர் கஷ்டத்திற்கும் அவநம்பிகைக்கும் பாத்திரமாவர். இத்தகைய ஆடைகளை விற்கக்கூடிய வியாபாரஸ்தலங்களுக்கு அனுப்புவதிலேயே அத்தொழிலாளியின் திறம் புலனும். பருத்தி ஆடைகளுக்குச் சாயமிடுவது வெகு சுலபமேயானுலும் அதில் அஞ்சனம் (Antimony) எத்துணை பகுதிவீதம் சேர்க்க வேண்டுமென்பதைத்தான் பெரிதும் கவனித்தல் வேண்டும். அளவு சிறிது வித்தியாசப்படினும் ஆடைகள் பயன்றருவனவாகா. (இண்டஸ்டிரி).

### கற்பூர உற்பத்தி.

சூடமானது பல செடிகளினின்றும், வாகை மரத்திலிருந்தும் உற்பத்தியாகின்றது. ரசாயனதிராவகங்களின் கலப்பால் கற்பூரம் சுத்தஞ் செய்யப்படுகின்றது. இது சைனுவிலும், ஜப்பானிலும் நிறைந்துகிடக்கும் லாரஸ் காம்போரா (Laurus Camphora), காம்போரா அபிசினேரம் (Camphora Officinarum) முதலான செடிகளினின்றும் பெரிதும் விருத்தியாகின்றது. சுமத்ரா, ஜாவா, போர்னியோ முதலானதேசங்களில் காபூர் (கற்பூரம்) என்று அத்தேசத்தவரா லழைக்கப்படும் ஒருவிதச் செடியினின்றும் சூடம் செய்யப்படுகின்றது. கற்பூரமென்ற வஸ்து மேற்கூறிய செடி, மரங்களின் பட்டையினின்றும் எடுக்கப்படுகின்றது. வாகைமரத்தின் பட்டைக்கும் மரத்திற்கும் மத்தியபாகத்திலிருந்து சூடம் பிரித்தெடுக்கப்படுகின்றது. மரப்பட்டையிலிருந்து எடுக்கப்பட்டவுடன் சூடம் சுத்தமாவதில்லை. அடிமரத்தின் மத்திய பாகத்திலிருந் தெடுக்கப்படும் கற்பூரமே உயர்ந்ததெனக் கருதப்படும். சூடம் செய்வதற்கு வாகை மரத்தைச் சிறுசிறு துண்டுகளாக வெட்டுகிருர்கள். பின்பு, அச்சிறு துண்டுகளை இரும்பாலான பெருங் கொப்பரைகளில் நீரை நிரப்பி அதிலிடுவார்கள். அக்கொப்பரைகளை முதலில் வைக்கோலால் மூடிப் பின் மண்மூடிகளால் மூடிப் பூர்த்திசெய்து காய்ச்சுவார்கள். நீர் கொதிப்பதனுற் கிளம்பக்கூடிய நீராவியுடன் சூடம் மேலேவந்து வைக்கோலில் செம்பட்டை நிறமுள்ள சிற்சிறு துளிகளாக மாவுபோன்று ஒட்டிக்கொள்ளுகின்றது. பிறகு வைக்கோலிலிருந்து சூடத்தைப் பிரித்து வில்லைகளாக்கி, வியாபாரஸ்தலங்களுக்கு அனுப்புகின்றனர்.

கற்பூரத்தைச் சுத்திசெய்யும் பல முறைகளிலும் (400°F) உஷ்ணப்படுத்தப்பட்டுத் தயாரிக்கும் வகையே சாலச்சிறந்தது. இப்பதார்த்தத்துடன் நூற்றுக்கு இரண்டு வீதம் சுண்ணும்பு இளகும் தன்மைபோன்ற அத்துணை நயமாகக் கலக்கப்படுகின்றது. இக்கலவை மெலினமான, ஒரே அளவுள்ள கண்ணுடிக்குப்பிகளிற் பின்னர் நிரப்பப்படும். அக்கண்ணுடியாலான குப்பிகள் கொஞ்சங்கொஞ்சமாகச் சூடேறினபிறகு அவற்றின் ஸ்புடத்திற்குத் தக்கவாறு திறந்துவைக்கப்படுகின்றன. இத்தொழிலைச் செய்வதற்கு மிகுந்த அனுபவமும் கவனமும் அவசியம். இந்தச்சூட்டை மிகவும் மெதுவாக ஏற்றினுல் சூடமானது நன்ருக ஸ்புடமாகிப் பக்குவநிலையை யடைவதற்கு முன்பே, கண்ணுடிக் குப்பிகளின் கழுத்தில் சூடமாக மாறிவிடுகின்றது. சீக்கிரமாகச் சூடேற்றும் பக்ஷத்தில் உள்ளிருக்கும் சாமான் முழுதும் துரிதத்தில் கெட்டுப்போம். அச்சூடு (350°F) க்குக் குறைந்தால் இந்நீராவி, பனியைப்போல இருக்கும். அப்பொழுது அது நன்ருகப்பொருந்தி ஒளி ஊடுருவுகின்ற நிலையிலிராது;

அதை விற்பதற்கும் சிரமப்படும். சிற்சில சமயங்களில் சீக்கிரமான சீதோஷ்ண மாறுபாட்டினால் திரவநிலையில் குப்பியினடியி லிருக்கின்ற கற்பூரமும் அதன் மேலுள்ளதும் கெட்டுப்போய்விடுகின்றன. ஆனதுபற்றி மறுமுறையும் புடமிட நேருகின்றது. நூறுபாகங்களுள்ள பச்சைக்கற்பூரமும் இரண்டு பாகம் சுண்ணாம்பும் இரண்டு பாகம் போன் பிளாக் (Bone Black) என்ற ஒருவகை கருநிறமான தூளும் சேரச் சீசாவினடியில் ஒருவகை வெண்மையான பதார்த்த முண்டாகின்றது. ஷை நீரில் அதன் பொங்குதலைத்தடுக்க ஒருவிதக் கலவை அவசியம்: 70° உஷ்ணமாக இருக்கும்பொழுது நீராவியாக மாற்றக்கூடிய சில எண்ணெய்களை அதோடு சேர்த்தால் நல்ல சூடமாகின்றது. நன்றாகச் சுத்தஞ் செய்யப்பட்ட சூடத்திற்கு ஆச்சரியமான ஒருவித உருசியும் மணமும் உண்டு. கற்பூரத்தை மதுசாரத்தைக்கொண்டு (Alcoholic) தயாரித்தல் மற்றொரு விதம். அப்போது ஒரு ஆணியினுதவியாலதைச் சுறண்டி எடுத்துவிடலாம். இவ்விதமாகச் செய்யும்பொழுது ஒருவித எண்ணெய்வாசனை வருகின்றது; காய்ச்சின பாத்திரத்தில் ஒருவகையான நிலக்கரிமட்டும் தங்கும். காற்றில் சூடம் அதிலிருக்கும் ஒருவித எரியும் வஸ்துவோடு கலந்து சிற்சில சமயங்களில் எரிகிறதுமுண்டு. சூடத்தின் சிறு துண்டுகளைத் தண்ணீரிலிட்டால் அவை சுற்றிச் சுற்றி வருகின்றன. கற்பூரம் காற்றுப்பட்டால் அதி சீக்கிரத்தில் கரைந்துவிடும். இதை நீக்கச் சூடத்துடன் மிளகைச் சேர்த்துவைப்பது முண்டு. (இண்டஸ்டிரி.)

ஸ்ரீ தாசன், திரிசிரபுரம்.



## வைத்தியப் பகுதி.

### குழந்தைகளின் ஆகாரம்.

(420-ம் பக்கத் தொடர்ச்சி.)

**சிறு குழந்தைகளுக்குப்** பிரதமத்திலிருந்து முன் சஞ்சிகையில் சொன்ன ஊற்றின விளக்கெண்ணெயை உபயோகித்து வந்தால் அக்குழந்தைகளுக்கு உண்டாகும் மலச்சிக்கல், மாந்தம், ஈழை, இருமல், கணச்சூடு முதலிய சகல வியாதிகளும் அணுகமாட்டா. மேற்படி குழந்தைகள் சுமார் 12-வயதாகி வளரும் வரையில் மேற்சொல்லிய விளக்கெண்ணெயை உபயோகித்து வருதல் வேண்டும். அப்படி உபயோகித்து வரும் காலத்தில், குளிர்ந்த தேச ஆகாரமாகிய டீ, காபி, உப்புமா முதலிய ஆகாரங்களை நீக்கி நம்முடைய உஷ்ணதேசத்திற்கு ஏற்ற தயிர் அன்னம், மோர் அன்னம், நீராகாரம், கேழ்வாருக் கஞ்சி முதலியவற்றை உபயோகித்தல் வேண்டும். சிலருக்குக் கேழ்வாருக் கஞ்சியில் தாமிரசத்து இருக்கிறதென்பது தெரிந்திருந்தபோதிலும் உஷ்ண ஆகாரம் என்று நினைக்கலாம். ஆனால் இது உஷ்ண ஆகாரமாய் இருந்தபோதிலும் நாம் பாகம் செய்யும் விதிகளால் இதி

லுள்ள உஷ்ணம் மாறிவிடுகின்றது. அது எப்படி எனின், கேழ்வரகைப் பொடிசெய்து அப்படியே பாகம்செய்யும் பக்ஷத்தில் அது சரீரத்திற்கு உஷ்ணத்தை அதிகரிக்கச்செய்யும் என்பது வாஸ்தவமே. ஆனால் மேல்படி கேழ்வரகின் மாவை ஜலத்தில் 3-நாள் ஊறவைத்துப் புளிப்பு ஏறியபிறகு பாகம் செய்து அதனுடன் மோர்கலந்து உட்கொள்ளும் பக்ஷத்தில் அது சரீரத்தில் உள்ள உஷ்ணத்தைமாற்றி ஜீரணசக்தியை அதிகரிக்கச்செய்து இரத்தவிருத்தியை உண்டுபண்ணும். இதில் அதிருப்தியுள்ள சிலர், இதைப் பின் சொல்லுமாறு செய்து உபயோகப்படுத்திக்கொள்ளலாம். அதாவது: கேழ்வரகை, தோசைமா ருப்புவதைப்போல் ருப்பி ஒரு துணியில் வடிகட்டித் திப்பியை எறிந்துவிட்டு வடிகட்டிய பாலை சுமார் ஒருமணிநேரம் தெளியவைத்து, அதில் தெளிந்துள்ள ஜலத்தை மெதுவாகச் சாய்த்துவிட்டு, மீதியுள்ள மாவைச் சலவைத் துப்பட்டியின்மீது ஊற்றி வெய்யிலில் காயவைத்து நன்ருய் உலர்ந்தபிறகு பில்லைகளாக புட்டியிலாவது டப்பிகளிலாவது பத்திரப்படுத்திக்கொண்டு, பால் சர்க்கரையுடன் சேர்த்துக் கஞ்சியாகவும், நெய் சர்க்கரை முந்திரிப்பருப்பு முதலியவைகளுடன் சேர்த்து அல்வா முதலியவைகளாகவும் செய்து உபயோகப்படுத்தலாம். தற்காலத்தில் அனேக பிரபுக்கள் இந்தக் கேழ்வரகை அநாகரீகமுள்ளதென்று தள்ளிவிட்டு ரூபமாறிவரும் இந்தக் கேழ்வரகுக் கஞ்சிகளையே குழந்தைகளுக்கும், வியாதியஸ்தர்களுக்கும் நாகரீகமுள்ளதென்று உபயோகப்படுத்தி வருகின்றார்கள். ஆனால் அத்தகையினர்கள் அது கேழ்வரகுதான் என்பதை அறியாமல் ஆர்லிக்ஸ் மெல்லின்ஸ் என்னும் பெயர்களை யுடையதா யிருப்பதனாலும் மேல்நாட்டவர்களால் தயாரிக்கப்பட்டதாயிருப்பதாலும் அதிக பணம் கொடுத்து வாங்கக்கூடியதா யிருப்பதாலும் ஏதோ அருமையாகிய வேறொன்று என்று நினைத்து அந்தக் கேழ்வரகையே உபயோகித்து வருகின்றார்கள்.

நான் இவ்வாறு சொல்லுவது சிலருக்கு விந்தையாய்த் தோன்றலாம். சில வருஷங்களுக்குமுன் மதராஸ் பார்க் வேடிக்கையில் இராஜாங்கத்தாரால் கைத்தொழில் காட்சி வைக்கப்பட்டது. அதில் வேடிக்கை பார்க்கவந்த ஒவ்வொருவருக்கும் ஆர்லிக்ஸ்மா செய்யும்விதம் காண்பிக்கப்பட்டது. அதில் அப்பொழுது மேல் ஆடை போக்கிய கேழ்வரகுமாவும் பார்லிமாவும் பால் சர்க்கரையுமே கலந்து அதுசெய்து காண்பிக்கப்பட்டது. இதைக் கண்ணுறும் ஒவ்வொருவருக்கும் அதை நினைப்பூட்டுகின்றேன். இதனால் கேழ்வரகே அது என்பது நன்குவிளங்கும். இவ்வாறு நம்தேசத்தில் மலிவாய்க் கிடைக்கக்கூடிய கேழ்வரகை அநாகரீக ஆகாரமாய் மதித்துப் பிரதேசத்தில் பாகம் செய்யப்பட்டு வருகின்ற கேழ்வரகை நாகரீகமானதெனக் கொள்ளல் என்னமதியோ!

## வேறு.

### குங்கும பாகம்.

சில நண்பர்கள் குங்குமம் செய்யும் பாகத்தை எழுதும்படி கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆதலின் அதனையும் விளக்குவாம். மேற்படி குங்குமம்செய்யப் பிரியமுடையவர்கள் மஞ்சளையும் படிகாரத்தையும் இடித்து சேர்த்துச் சுண்ணும்புஜலம் மிதக்கவிட்டு ஒரு மண்பாண்டத்தில் போட்டு சீல் செய்து பூமியில் 1-மண்டலம் புதைத்தெடுக்க உயர்ந்தமட்டிக் குங்குமமாகும்.

டாக்டர், மாசிலாமணி முதலியார்.

# அறிஞரின் அமுதமொழிகள்.

(422-ம் பக்கத் தொடர்ச்சி.)

64. Fates ordain that dearest friends must part *Young.*
விதி மிகவும் நேசமுள்ள சிநேகிதர்களையும் பிரிந்திருக்கும்படியாக நியமிக்கிறது. (யங்)

65. I would rather have the affectionate regard of my fellowmen than I would have heaps and mines of gold *Dickens.*
பொற் குவியலையும் பொற் சுரங்கங்களையும்விட என்னுடைய தோழர்களின் அன்புள்ள மதிப்பே எனக்கு மேல். (டிக்கன்ஸ்)

66. Great thoughts reduced to practice, become great acts *Hazlitt.*
பெரிய ஆலோசனைகளைப் பழக்கத்திற்குக் கொண்டுவரும் பட்சத்தில் அவையே பெரிய காரியங்களாக முடியும் (ஹாஸ்லிட்)

67. Ill habits gather by unseen degrees,
As brooks make rivers, rivers run to seas *Dryden.*
சிற்றாறுகள் பெரிய நதிகளாகவும், நதிகள் கடல்களாகவும் விருத்தியாவதுபோல, கெட்ட பழக்கங்கள் தாமே விருத்தியாகின்றன. (ட்ரைடன்)

68. To weep, is to make less the depth of grief *Shakespeare,*
அழுவது பெருந் துயரத்தைக் குறைப்பதாகும். (ஷேக்ஸ்பியர்)

69. Who well lives, lives long *Bartas.*
கிரமமாய் நடப்பவர்கள் நீடூழிகாலம் வாழ்வார்கள். (பார்டாஸ்)

70. Mine honour my life is; both grow in one,
Take honour from me, and my life is done *Shakespeare.*
எனது கௌரவமே என் உயிர்; இரண்டும் ஒன்று. என்னுடைய கௌரவத்தை நீக்கின், என்னுடைய உயிர் போயினதாகும். (ஷேக்ஸ்பியர்)

71. Thought takes a man out of servitude into freedom *Emerson.*
விவேகம் மனிதனை அடிமைத்தனத்தினின்று விடுதலை செய்கிறது. (இமர்ஸன்)

72. How poor are they that have not patience? *Shakespeare.*
பொறுமை யில்லாதவர் பொருளற்றவராவார். (பொறுமையே பொக்கிஷம்) (ஷேக்ஸ்பியர்)

73. In love of home the love of country has its rise *Dickens.*
குடும்ப விசுவாசத்துக்குத் தக்கபடி தேச விசுவாசம் உண்டாகிறது. (டிக்கன்ஸ்)

74. Wisemen never sit and bewail their loss,
But cheerly seek how to redress their harms *Shakespeare.*
புத்திசாலிகள் உட்கார்ந்துகொண்டு தங்கள் நஷ்டத்தைப்பற்றித் துக்கப்படமாட்டார்கள்; ஆனால் அக்கஷ்டங்களை நீக்கச் சந்தோஷத்துடன் வழி தேடுவார்கள். (ஷேக்ஸ்பியர்)

(தொடரும்.)

A. P. இராமன், B. A.

# பிரபவ வருஷத்தின் கிரகநிலைகளும் பலன்களும்.

அறுபது வருடங்களில் முதலாவதாகிய இந்தப் பிரபவ வருடமானது, சூரியனை இராஜாவாகவும், சந்திரனை ரஸாதிபதியாகவும், செவ்வாயை மேகாதிபதியாகவும், புதனை மந்திரியாகவும், அர்க்காதிபதி, சேனாதிபதியாகவும், குருவை தான்யாதிபதியாகவும், சனியைசஸ்யாதிபதி, நிரஸாதிபதியாகவும் நியமித்துக்கொண்டு, சுக்கிரனுக்கு ஒரு ஸ்தானத்தையும் கொடாமல், கார்த்திகைமீ 23வ வியாழக்கிழமை ரோகணி நட்சத்திரத்தில் இரவு, 9—21 மணிக்குப் பிடித்து 1—5/16 பிரமாணமாய் இரவு 1 மணிக்குவிடும் சந்திர கிரஹணம் ஒன்று, மார்கழிமீ 9வ (24-12-27) நம்நாட்டில் தென்படாதபடி ஏற்படும் ஓர் சூரியகிரஹணமும் ஆக இரண்டு கிரஹணங்களைக் கொண்டும், புதனுக்கும், செவ்வாய்க்கும் மேகாதிபதி அர்க்காதிபதி ஸ்தானங்களைப்பற்றியும், குருவுக்கும், சுக்கிரனுக்கும் தான்யாதிபதி ஸ்தானத்தைப் பற்றியும் விவாத மேற்படச் செய்துகொண்டும் வெகு உல்லாசமாய் ஜனனமாயிற்று.

இவ்வருடம் மஹாமேரு பர்வதத்திற்குத் தெற்கே காளமேகம் உற்பத்தியாகப்போகிறது. கலந்த மேகத்துடன், காற்றோடுங்கூடிய சுழிமழை 8 படி. இதில் சமுத்திரத்தில் பாதியும், மற்றபாதியில் 3-பாகம் மலை வனாந்தரங்களிலும், 2-பாகம் நாடு நகரங்களிலும் கண்ட வருஷமாய் வருஷிக்கும். பொதுவாக மழையினால் சில இடங்களிலும், மழையின்றிச் சில இடங்களிலும் பல கெடுதல்களுண்டாகும். முந்திய வேளாண்மை சிறக்கும்; பின் பயிர்கள் பலிதமில்லாம லிருக்கும். மின்னல், மேககர்ஜிதம் குறையும்; செடிகள் நன்ருகப் பலிதமாகும்; ஆனால் பின்னால் ரோகங்களால் பாதைப்பட்டு அழியும்; பயிர்கள் பாதி வரிசை பல னளிக்கும். கோடை மழை சுழிக்கும்; மாரிக்கால மழை மிகுதியாம்; சில பிரதேசங்களில், வெள்ளம், புயல், பூகம்பம் முதலியவைகளாலும், அக்கினி பீடை, திருடர் பயம், கலகம், அரசர் பயம், பித்தரோக முதலிய வியாதிகளினாலும் ஜனங்களுக்குக் கஷ்டமும், சமயக் கலகங்களும், மதத்துவேஷங்களும், தற்கொலையும் அதிகப்படும். ஆயினும், ஜனன விகிதத்திற்கு மரணம் குறைவுதான். இந்தப் பிரதமமாகிய பிரபவ வருடமானது (13-4-27) புதவாரம், சுக்கிலபட்சம், துவாதசி, பூரநக்ஷத்திரத்தில் பகல்நாழிகை 29—53 க்குக் கன்னியாலக்னம் அந்தியத்தில் சூரியன் வில்தான சமயத்திலும், சந்திரன் நித்திரையிலும், செவ்வாய் பூஜையிலும், புதன் அப்பியங்கனத்திலும், குரு வஸ்திரமணியும் சமயத்திலும், சுக்கிரன் யோகத்திலும், சனி தந்ததாவரணத்திலும், ராகு நிஷ்டையிலும், கேது அலங்காரம் செய்தலிலும், இருக்கும்போது ஜன்மிக்கிறது. ஆதலின், தங்கம், பித்தளை, ஈயம், மாணிக்கம், நீலம், பவழம், முத்து, வஜ்ஜிரம், புஷ்பராகம் முதலியவை மலியும்; வெள்ளி, வெண்கலம், இரும்பு, தாம்பிரம், மரகதம், வைடூரியம், கோமேதகம், இரஸம் முதலியவை குறையும்; சிஷ்டபரிபாலனம் அதிகம். இடபராசியிற் பிறந்தோர்க்கு இராஜகோபம் உண்டாம்.

சித்திரை, வைகாசி, ஆனி ஆகிய மாதங்களில் விவாகாதி மங்கள கருமங்கள் சிறக்கும்.

அசுபதி, மிருகசீரிடம், ஆயிலியம், அனுஷம், மூலம், கார்த்திகை, புனர்பூசம், அஸ்தம், சுவாதி, பூரம், அவிட்டம், உத்திராடம், பூரட்டாதி, ரேவதி ஆகிய இந்த நட்சத்திரங்களில் ஜனித்தவர்களுக்கு வரவும், செலவும் சமபாகமாகவும், பரணி, உத்திரட்டாதி, சித்திரை, திருவாதிரை, மகம், கேட்டை, திருவோணம் ஆகிய இந்த நட்சத்திரங்களில் ஜனித்தவர்களுக்கு 3-பாகம் வரவும், 1-பாகம் செலவும்,பூசம், பூராடம், ரோகணி, சதயம், உத்திரம், விசாகம் ஆகிய இவற்றில் ஜனித்தவர்களுக்கு 1-பாகம் வரவும் 3-பாகம் செலவுமாக

இருக்கும். அசுபதி, ஆயிலியம், அனுஷம், பூரட்டாதி ஆகிய இந்த 4-ல் ஜனித்தவர்க்கு வியாதி. திருவாதிரை, மகம், கேட்டை, திருவோணம் ஆகிய இவற்றில் ஜனித்தோர்க்கு விசேஷபலன். கறுப்பு வஸ்துக்கள் விலையேறும்; கரிசல் பூமியில் விளைச்சலதிகம். சில இடங்களில் சிவப்புத் தானியம் விருத்தியாகும். உலகத்தில் பல மாறுதல்கள் ஏற்படும்.

இவ்வருடம் க்ஷேமமுண்டாகக் கடவுளைப் பிரார்த்திப்போமாக. சுபமஸ்து.

கே. எஸ். முத்துக்கிருஷ்ண ரெட்டியார், பால ஜோதிடம்.

## பிரபஞ்ச அநுபவம்.

***

என்னிடத்தில் புத்தகங்கள் நிறைந்த பீரோக்கள் பல உண்டு. ஆனால் என் உள்ளத்தில் ஒரு புத்தகத்திலுள்ள நீதிகளாவது பதிந்திரா. நான் பலருக்குப் பிரசங்க வாயிலாகவும், பத்திரிகைகளின் வாயிலாகவும் அனேக நீதிகளைப் போதிப்பேன்; ஆனால் செய்கைகளிற்காட்டும் வழக்கம் என்னிடத்தில் இல்லை. ஆதலால், நண்பனே! நீ ஒருவனுடைய பேச்சுக்களையோ, படாடோபங்களையோ கண்டு மயங்கிவிடாதே! அவனுடைய செய்கைகளுக்குத் தகுந்த மரியாதையைமட்டும் செலுத்து; அப்பொழுது தான் உனது அன்பு தகுந்தவிடத்தில் வைக்கப்பட்டதாகும்.

***

நியாயம்பெற விரும்புகிற பலர் தங்கள் தெரு அல்லது கிராமங்களில் தகுந்த பெரிய மனிதர்களிற் சிலரை வைத்துக்கொண்டு தங்கள் வழக்கை ஒருவாறு முடிவுசெய்து கொள்ளுகிறார்கள். ஆனால், வீம்பு படைத்த மனிதர்களோ கோர்ட்டுகளுக்குப்போய் அவதிப்படுகின்றார்கள். வழக்காடி வெற்றிபெற்றவர்கள்கூட "எனது ஆணவமும், மமதையும், பொருளும், சரீரமும், உணவும் ஒடுங்கிவிட்டன" என்று கூறுகின்றனர். ஏன் அப்படி? அதிலுள்ள இரகசியங்கள்தான் என்ன? வென்பதைச் சிந்தித்துப்பார். பிறகு உன்னிஷ்டம்போல் நட. உன்னைக் கேட்பார் ஒருவருமேயில்லை!

***

"கடன் கேளாமற் கெடும்; பயிர் பாராமற் கெடும்; ஆள் அடக்காமற் கெடும்; பொருள் போற்றாமற் கெடும்; கல்வி நினையாமற் கெடும்; தொழில் செய்யாமற் கெடும்; சித்திரம் பழகாமற்கெடும்." என்பது பெரியோர் வாக்கு. ஆனால், நண்பனே! உன்மீது பிறர்காட்டும் மரியாதையானது நீ பிறரை வணங்காவிடிற் கெட்டுப்போய்விடும் என்பதை ஒருகாலும் மறவாதே! உனக்கு ஆட்சிபுரிய விருப்பமுண்டானால், நீ ஊழியஞ் செய்வதே சிறந்தவழி!

***

"சுவாமி! எங்கு வந்தீர்கள்? காலமெல்லாம் உங்களிஷ்டம்போல் நடந்தே இவ்வறுமைக்குள்ளானேன். இரவு உணவுக்கும் வழியில்லையே! ஏதேனும் பிழைக்கும் வழி யொன்று சொல்லக்கூடாதா?" என்று ஒருவன் மிக்க பரிதாபமான நிலைமையிற் கைகூப்பிக் கும்பிட்டு ஒருவரை வினவினான். உடனே வந்திருந்த ஐயர் "இதென்ன பிரமாதமான காரியமா? வருகிற அமாவாசையன்று நீ 1000 பிராமணர்களுக்குச் சாப்பாடு போட்டுவிட்டால், தரித்திரம் நீங்கிப் பெரிய குபேரனாய்விடுகிறாய்! அப்புறம் ஸ்ரீதேவி வந்து உன்வீட்டில் செல்வத்தைக் குவிப்பாள். அதுசமயம் நான் வந்தால், என்னை மறந்துவிடாதே; தயவு இருக்கட்டும்" என்று கூறினாராம்!

கி. ஆ. பெ. விசுவநாத பிள்ளை. திருச்சிராப்பள்ளி.

## ஓர் ஐய வினு.

ஆனந்தபோதினி, அக்ஷய வருட மாசித் திங்க ளிதழின் 360-ம் பக்கம் வைணவப் பகுதி, ஸ்ரீ ஆண்டாள் சரிதையில், ஸ்ரீ பெரியாழ்வார் வேயர் குலத்தில் அவதரித்தனர் என்று கூறி யிருக்கிறது. "வேயர் தங்கள் குலத் துதித்த விட்டுசித்தன்" என்று நாலாயிரப் பிரபந்தம், பெரியாழ்வார் திரு மொழியிலும் கூறப்படுகிறது. வேயர் என்ருல் வேவுகாரர் என்றும், இடை யர் குலத்தினரென்றும் சிலர் பொருள் கூறுகின்றனர். ஸ்ரீ பெரியாழ்வார் பிராமணராதலின் பிராமண வகுப்பில் வேயர்குல மென்ருெரு குலமுண்டா? இதனை நன்குணர்ந்த அறிஞர் இப்போதினியின் வாயிலாகத் தெரிவிப்பின் நலம்.

வ. ச. சூரியநாராயண மூர்த்திப்பிள்ளை, வாலாஜா பேட்டை.



## நாவல் பகுதி.

(429-ம் பக்கத் தொடர்ச்சி.)

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

**கறுப்:—**"நான் * * னுடைய சரித்திரத்தைக் கூறுகிறேன்." என்ருன்.

ஆனந்தலிங் அப்படியே செய் என்ருன். அதன்மேல் கறுப்பண்ணன் கீழ்க்கண்டபடி கூறத்தொடங்கினுன்:

" * * ன் நல்ல செல்வவந்தனுடையபிள்ளை; மிக்க செல்வாக்கோடு வளர்க்கப்பட்டவன்; கௌரவபதவியில் இருக்கத்தக்கவண்ணமாகவே அவன் தந்தை யவனை வளர்த்தான். அவன் தந்தை யிறந்துபோனுன். அவன் தாய் இரண்டாவது புருடனை மணந்துகொண்டாள். அவன் பட்சமற்றவன். பிறகு தன் தாயின் ஆஸ்திக்குச் சொந்தக்காரனுகிய இச்சிறுவனைத் துர்நடக்கை களில் பிரவேசிக்கச்செய்து கெடுத்துவிட்டான். அமிர்தம்மாள் அச் சிறுவன் சகோதரி. அவன் கெட்டவழிகளில் நுழைந்து ஆபத்துகளில் சிக்கிய போதும் அமிர்தம்மாள் தன் சகோதரனைக் கைவிடாமல் தன்னுல்கூடிய உதவிகளைச் செய்துகொண்டும் அவனைக் கெட்ட வழியினின்று திருப்ப முயன்றுகொண்டி ருந்தாள். அவன் சிறைச்சாலையில் இறந்தபின்பு தாயா ரும் மடிந்ததால் அமிர்தம்மாளே திரண்ட ஆஸ்திக்குச் சொந்தக்காரியானுள்.

**ஆனந்:—**சரி. அவள் மணமுடிந்தவள்போல் ஏன் நடிக்கவேண்டும்?

**கறு:—**"ஏனெனில், இதுகாறும் அவளுக்குப் பிரியமான புருடன் அவள் கண் களுக்குப் புலப்படவில்லை. அவளோ மிக்க ரூபவதி. அதோடு மிக்க செல்வமுடையவள். தான் கலியாணமாகாதவளென்று தெரிந்தால் தனக்குத் தகுதியல்லாதவர்களும் உண்மைக்காதல் இல்லாதவர்களு

மாகிய பல புருடர்கள் தன் அழகு ஆஸ்தி இரண்டிற்கு மட்டுமே ஆசை வைத்து ஒவ்வொருவரும் தன்னை மணம் புரியும்படி தொந்தரை யுண்டாக்குவார்கள். இதுவேயன்றி யவள் மணம்புரிந்துகொண்டிருப்பதாய் அபிநயம் செய்வதற்கு வேறு காரணமேயில்லை'' என்றான். இச்சங்கதிகளைக் கேட்ட ஆனந்தலிங்கின் மனதில் ஒருவித சந்தோஷமும் நம்பிக்கையும் உண்டாயின.

நகரத்தைச் சேர்ந்ததே ஆனந்தலிங், கறுப்பண்ணனை யவன் வீட்டிற்கனுப்பிவிட்டு அவனை யறியாமல் அவன்மேல் காவல் வைத்துவிட்டுத் தான் அமிர்தம்மாளையும் அம்பாலிகையையும் தேடிக்கொண்டு சென்றான். அமிர்தம்மாளுடைய வண்டி வீட்டிலில்லாததால் அவர்கள் நவீனபுரியில் எங்கோ ஒளிந்துகொண்டிருக்கிறார்கள் என்று தெரிந்துகொண்டான்.

---

## 18-வது அத்தியாயம்.

அந்நகரில் வாடகைக்குக் குதிரைகளும் வண்டிகளும் இருக்க எங்கெங்கேயிடம் உளதோ அங்கெல்லாம் பார்த்தான். எங்கும் அவர்கள் வண்டியகப்படவில்லை. கடைசியில் மனச்சோர்வடைந்து அவன் திரும்பும் சமயம், சாம்பனைத் தற்செயலாய்க்கண்டான். ஆனால் தட்டென்று அவனைச் சந்தித்துப் பேசவில்லை. ஏனென்னில் தன் எஜமானியின் இருப்பிடத்தைக் காட்டாதபடி அவனுக்குக் கட்டளையிடப்பட்டிருக்கும் என்று ஆனந்தலிங் அறிவான். ஆகையால் பேசாமல் அவனைப் பின்தொடர்ந்து சென்றான்.

ஆனந்தலிங் சுமார் மூன்றுமணிநேரம் சாம்பனைப் பின்தொடர்ந்து கடைசியில் அவன் ஒரு நாணயமான வீதியிலுள்ள ஒரு வீட்டிற்குள் பிரவேசிப்பதைக் கண்டான். தான் அவ்வீட்டிற்குள் நுழையாமலே வெளியில் அவ்வீட்டைப்பற்றி விசாரித்தான். அது மிக்க மரியாதையான ஒரு சிறு ஹோட்டல் என்று கேள்விப்பட்டான். பிறகு அரைமணிநேரங் கழித்து சாம்பன் வெளியிற் செல்வதை யறிந்து அவன் சென்றபின் கதவைத்தட்டித் தன்பெயர் எழுதிய ஒரு சீட்டை அமிர்தம்மாளிடம் கொடுக்கும்படி யனுப்பினான். இரண்டொரு நிமிடங்கள் கழித்து அமிர்தம்மாள் கூடத்தில்வந்து அவனைச் சந்தித்தாள்.

அவனைக்கண்டதும் "என்னிடம் என்ன அலுவலாய் நீ வந்தாய்?'' என்றாள்.

ஆனந்தலிங் முதலாவது "நீயேன் அந்தவிடத்தைவிட்டு அம்பாலிகையை யழைத்துக்கொண்டு ஓடிவந்துவிட்டாய்? அதைக்கூறு!'' என்றான்.

**அமிர்தம்மாள்:**—நீ கூறிய அதிசயமான விஷயங்கள் யாவும் மெய்யாவென்று சோதிக்க வந்தேன்.

**ஆனந்:**—அப்படியே சோதித்தாயா?

**அமிர்:**—எனக்குச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை.

**ஆனந்:**—உனக்கு என்ன சோதனை வேண்டும்.

**அமிர்:**—நான் கறுப்பண்ணனை முகத்திற்கு நேராய்ச் சந்திக்கவேண்டும்.

**ஆன:**—நீ என் கூட வா; உடனே உன் பிரியப்படி செய்யலாம்.

**அமிர்:**—அவனை யெங்கே காணலாம்?

**ஆனந்:**—அவன் வீட்டில்.

**அமிர்:**—அவன் யாவும் ஒப்புக்கொண்டானே?

**ஆன:**—ஆம்.

**அமிர்:**—என்னைப்பற்றி யென்ன கூறினன்?

**ஆனந்:**—நீ யிக்குற்றத்தில் சம்பந்தப்படவில்லை யென்பதை முன்னமே யொப்புக்கொண்டான். ஆகையால் உன் உண்மையான சரித்திரம் எனக்குப் பூரணமாய்த் தெரிந்து நான் மிக்க சந்தோஷமடைந்தேன்.

**அமிர்:**—அப்படியாயின் உடனே அவனிடம் செல்லலாம்.

**ஆனந்:**—"அம்பாலிகையையும் கூட அழைத்துச் செல்லவேண்டும்" என்றான்.

முதலில் அதற்குச் சம்மதியாத அம்மாது சற்றுநேரங்கழித்து அவ்வாறே யொப்புக்கொண்டு "பின் என்னதான் கூறினன்" என்றாள்.

**ஆனந்:**—"அவன் யாவும் ஒப்புக்கொண்டு மெய்யான மரணசாசனத்தைக் கொடுத்துவிடுவதாகவும், தான் அம்பாலிகைக்குச் செய்த தீங்கிற்காக நான் கோருகிற பிரதியுபகாரமனைத்தும் செய்வதா யொப்புக்கொண்டான்" என்றான்.

**அமிர்தம்மாள்:**—"சரி போவோம்" என்றாள்.

**ஆனந்:**—அம்பாலிகையையும் கூட அழைத்துக்கொண்டு வரவேண்டும்.

**அமிர்:**—வேண்டாம்.

**ஆனந்:**-"இல்லை. கட்டாயம் அழைத்துக்கொண்டுவா. நான் முன்னடிச் செல்கிறேன். ஒன்றுக்கும் பயப்படாதே. பெருந்தீங்காய் முடியவிருந்த இந்த விஷயம் மிக்க சந்தோஷமாய் முடியும்" என்றான்.

அமிர்தம்மாள் சற்றுநேரம் சிந்தித்த பிறகு அம்பாலிகையையும் அழைத்து வருவதாய் ஒப்புக்கொண்டாள்.

ஆனந்தலிங் அதைவிட்டுப் புறப்பட்டதும் நேராய் மனோகரனிருக்குமிடத்திற்குச் சென்றான். அவனுக்கு முன்னமே அப்போதைக் கப்போது நடந்த சமாச்சாரங்களைத் தெரிவித்துக்கொண்டே யிருந்தான். இப்போது பின்னல் நடந்த சங்கதிகள் யாவும் கூறினன். இருவரும் அங்கிருந்து பவானியிருக்கும் வீட்டிற்குச் சென்று மூவரும் ஏகோபித்துக் கறுப்பண்ணன் இருக்கும் மாளிகைக்குச் சென்றார்கள்.

(தொடரும்.) ஆரணி-குப்புசாமி முதலியார்.

---

## பஞ்சாங்க அறிவிப்பு.

பிரபவஹு பஞ்சாங்கத்திற்கு முன்பண மனுப்பிய சந்தாநேயர்களுக்கு 24-3-1927 ல் பஞ்சாங்கங்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன.

# விநோதப் பகுதி.

**மீசைக்கு வெள்ளைக்கப்:**—நாகரிக முதிர்ந்த இக்காலத்தில் மனிதர்க்கு வயதேறிக் கடவுள் இயற்கையால் மீசை நரைக்க ஆரம்பித்தவுடன் அவர்கள் அதிருப்தியடைந்து அந்தக்கடவுள் அமைப்பைமாற்றி வெள்ளையைக் கறுப்பாக்க முயன்று கறுப்புச்சாயம் தயாரித்து வெள்ளை மீசைகளுக்குப் பூசி வருகின்றார்கள். இவர்கள் இவ்வாறு செய்வதைப் பார்த்துவிட்டுக் கறுப்புமீசைக்காரர்களாகிய இளைஞர்கள் நாமும் நாகரிகத்துக்குத் தகுந்தபடி ஒரு மாறுதலைச் செய்யவேண்டுமென்று தங்கள் கறுப்புமீசைகளை வெள்ளையாக்குவதற்கு வெள்ளைக்கப் தயாரிக்க முயற்சிசெய்து வருகின்றார்களாம். கூடிய சீக்கிரத்தில் கறுப்பு மீசைகள் வெள்ளையாக்கப்படுமாம்.

*  *  *  *

**கிழவிகள் நாகரிகம்:**—இக்காலத்தில் நாகரிக மேடையில் நின்று நர்த்தனஞ் செய்யும் இளம் பெண்மணிகள், கழுத்தின் அடியில் முன்னும் பின்னும் சந்திரப்பிறைவளைவுவைத்து உடல் வெளியில் தெரியவும், கையின் அடிப்பாகம் வெளியில் தோன்றவும் உடைதைத்து அணிந்து உல்லாசமாய் எங்கும் உலாவி நாகரிகப் பெருமை காட்டிக்கொள்வதைக் கிழவிகள் பார்த்து, நாமும் ஏன் தற்காலநாகரிகத்திற்குத் தக்கபடி ஒருமாறுதல் செய்யக்கூடாது? என்று முழங்கைவரை நீண்ட ரவிக்கையும், சீட்டிப்பாவாடையும், பட்டுத் தாவணியும் அணிந்துகொள்ள முயற்சிசெய்து வருகிறார்களாம். 1930-ஆம் வருஷத்துக்குள் இந்த முயற்சி முடிவுக்கு வருமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

*  -  *  *

**பணச்செலவில்லாமல் சங்கதி யறிவிக்கும் கருவிகள்:**—ஒரு சமாசாரத்தைப் பல ஜனங்களுக்கும் தெரிவிப்பதற்கு அநேகர் மிகுந்த பணச்செலவுசெய்து பத்திரிகைகளில் விளம்பரஞ் செய்கிறார்கள்! வெளியூர்களுக்குச் சமாசாரம் அனுப்புவதற்குத் தந்திச் செலவு செய்கிறார்கள். இவர்களுக்குப் பணச்செலவில்லாமல் சமாச்சாரம் வெளியிற் செல்வதற்குப் பிரமதேவனால் சில கருவிகள் செய்யப்பட்டு இங்கனுப்பப்பட்டிருக்கின்றன. அக்கருவிகளைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு சமாசாரங்கள் பேசினால் அவை அக்கருவிகளால் வெகு சீக்கிரத்தில் வெளியிற் பரவிவிடுகின்றன. முணுமுணுவென்று பேசும் இரகசியங்களையும் அந்த அதிசயக்கருவிகள் எளிதிற கிரகித்து எவருக்கும் எட்டும்படி செய்துவிடுகின்றன. அக்கருவிகள் அங்குமிங்கும் கேட்டதைச் சொல்லிக் கலகமூட்டும் அவதார புருஷர்களே.

*  *  *  *

**நூதன விவேகி:**—நூதன விவேகி யொருவர், எந்த இடத்தில் எந்த வியாபாரம் செய்தால் அதிக இலாபம் கிடைக்குமென்று அநேக தினங்களாக யோசனைசெய்து, சாவுநேர்ந்தபோது ஜனங்கள் பட்டினிகிடந்து இளைத்துப் போய்ச் சுடுகாட்டுக்கு வருவதால் அந்தச் சுடுகாட்டில் காப்பிக்கிளப் ஒன்று வைத்தால் வியாபாரம் மும்முரமாக நடக்குமென்று அங்கே அழகிய சிற்றுண்டிச் சாலையொன்று திறக்கமுடிவு செய்திருக்கிறாராம்.

---

# வர்த்தமானக் குறிப்பு.

**ஆகாயப் போக்குவரவு வியாபாரத்தில் ஜெர்மனியின் முதன்மை ஸ்தானம்:**—தற்பொழுது ஆகாயக்கப்பல் மார்க்கமாக வியாபாரம் நடத்துவதில் ஜர்மனி, மற்ற தேசத்தாரைவிட உன்னத பதவியடைந்திருக்கிறது. ரயில் மார்க்கங்களுக்குப் போட்டியாய், பெரிய நகரங்கள் தோறும் இவை செல்கின்றன. வர்ஸேல்ஸ் (Versailles) உடன்படிக்கைக்குப் பிறகு ஜர்மனி ஒரு குறிப்பிட்ட சக்தியுள்ள ஆகாயக்கப்பலுக்கு மேல் வலுவுள்ளவை செய்யக்கூடாதென்ற ஏற்பாட்டால் அத்தொழிலுக்கு அங்கு இடைஞ்சல் ஏற்பட்டது. இவ்வருஷம் அத்தடை பூராவாகவும் எப்பொழுதும் பாதிக்காதபடி நீக்கப்பட்டதால் அங்குள்ள தொழிற்சாலைகளில் எங்கும் ஆகாயவிமானம் செய்யப்படும் கோஷ்டம் கேட்கிறது. ஆகாயவிமானம் செய்வதில் தனக்கு நிகராக எத்தேசமும் நிற்காது என்பதை ஜெர்மனி காட்டுகின்றது. இம்லேசான ஆகாயவிமான வேலையை நடத்திக்கொண்டிருந்த ஜங்கர்ஸ் கம்பெனியும், ஏரோ லாயிட் கம்பெனியும் ஒன்றுபட்டு இப்போது லப்ட்ஹன்ஸா என்னும் பெரிய கம்பெனியாகிவிட்டன. இக் கம்பெனிக்கு இப்போது ஜெர்மனியிலிருக்கும் கீர்த்தியை, கனடாவில், கனடியன் பஸிபிக் இருப்புப்பாதைக்கு ஏற்பட்டிருக்கும் பிரபல்யத்திற்குத்தான் ஒப்பிடலாம்; இப்போது இங்கே தயாராகியிருக்கும் விமானத்தில் கோடைக்காலம், மாரிக்காலம் என்னும் நியதியின்றி எப்பொழுதும் ஜனங்கள் நிறைந்தவண்ணம் ஒழுங்காகப் பிரயாணஞ் செல்லலாம். ரெயிலில் போகிறவர்களுக்கு விதித்துள்ள முதல் வகுப்புக் கட்டணம் எவ்வளவோ அவ்வளவே ஆகாயவிமானப் போக்குவரவுக்கும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இப்பொழுது ஜர்மனியில் ஒரு இரவில் 500 மைல் போகக்கூடியதாயும், போகிறவர்கள் எப்பொழுதும் சௌகரியமாகச் சுருட்டு பிடித்துக்கொண்டே செல்வதற்கு அனுகூலமாகவும், வியாபாரப் போக்குவரவிலேயும் யாதொரு தடையும் ஆபத்தும் நேராதபடியும், மற்ற தேசங்களால் கண்டுபிடிக்கப்படாதவிதத்தில் செல்லக்கூடியதாயும் இக் கப்பல்கள் செய்யப்பட்டிருக்கின்றன. இது ஆச்சரியத்தையன்றோ விளைவிக்கிறது.

* * * *

**சீனதேசத்தில் பாலிய விவாஹத் தடை உத்தரவு:**—ஷான்டாங் கவர்னர், பாலிய விவாஹத்தைத் தடுக்க அம்மாகாணத்திலிருக்கும் மாஜிஸ்ட்ரேட்டுகளுக்கெல்லாம் ஒரு கட்டளை பிறப்பித்திருக்கிறார். அங்கு 18-வயதிற்குட்பட்ட ஆணும், 16-வயதிற்குட்பட்ட பெண்ணும் விவாஹத்திற்கு அனுமதிக்கப்படாதவராவர். சீனாவின் க்யோமின்டாங் காங்கிரஸ் (Kuomintang Congress) ஸ்திரீ புருஷர்களுக்கு, தேசீயவிவகாரங்களிலும், வரவு செலவின் சிக்கனங்களிலும், கல்வி சம்பந்தமான விஷயங்களிலும், சரிபாக உரிமை இருக்கவேண்டுமென்னும் பிரேரேபணையை அங்கீகரித்திருக்கிறது. நமது தேசத்திலும் இத்தன்மையான விதிகள் ஏற்படின், திடகாத்திரரான ஸ்திரீ புருஷர்கள் இருவரும் மனமொத்த வாழ்க்கையில் ஈடுபட்டு நல்ல புத்திரப்பேற்றை யடைந்து இல்லற தருமத்தைக் குறைவின்றி வளர்த்துவரக் கூடும்.

* * * *

**துருக்கியில் ஸ்திரீகளின் முன்னேற்றம்:**—துருக்கி குடியரசு, அரசாங்கத்தாரால் இதுவரையிலும் ஸ்திரீகளுக்குக் கொடுக்கப்படாத மிகவும் உயர் பதவியாகிய சுகாதார (ஹைஜின் ப்யூரோவின்) தலைமைப் பதவியை பெட்ரி ஹானேம் என்னும் மாதுக்கு அளித்திருக்கிறது.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**பிரபவஹூ வைகாசிமூ—கலியுகாதி 5029, சாலிவாகனம் 1850,**
**பசலி 1336—கொல்லமாண்டு 1102—ஹிஜரி 1345**
**இங்கிலீஷ் 1927ஹூ மேமூ—ஜூன்மூ**

| வைகாசி | மே | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | சனி | திர38-0 | சித்40-48 | ம40-48அ | ரிஷபரவி நாழி 30 - 20, |
| | | | | | | சனிப்பிரதோஷம் |
| 2 | 15 | ஞா | சது42-50 | சுவா47-0 | சித்47-0ம | மருந்துண்ண [தங்கள் |
| 3 | 16 | திங் | ○46-48 | விசா52-23 | ம52-53சி | பௌர்ணமி, கௌரி விர |
| 4 | 17 | செவ் | பிர49-48 | அனு56-53 | சி56-53ம | வைசாக பகுளம் |
| 5 | 18 | புத | துதி51-50 | கேட60 | சித்60 | குளம் கிணறு வெட்ட |
| 6 | 19 | வியா | திரி52-48 | கேட்0-30 | பி0-30சி | விவாக முகூர்த்தம் |
| 7 | 20 | வெ | சது52-40 | மூல2-58 | அ2-58பி | கரிநாள், கணிதாரம்பம் |
| 8 | 21 | சனி | பஞ்51-25 | பூரா4-23 | சித்60 | தானியம் செலவிட |
| 9 | 22 | ஞா | சஷ்48-58 | உத்4-38 | அமி60 | சர்வமுகூர்த்தம்[செலவிட |
| 10 | 23 | திங் | சப்45-25 | திரு3-45 | அ3-45சி | சுபமுகூர்த்தம், தானியம் |
| 11 | 24 | செ | அ40-43 | அவி1-45 | சி1 45ம | அவமாகம் |
| | | | | சதை53-35 | | [ரம் ஜெபிக்க |
| 12 | 25 | புத | நவ34-58 | பூரட்54-28 | அ54-28சி | ஏற்றம் ஸ்தாபிக்க, மந்தி |
| 13 | 26 | வியா | தச28-20 | உத்49-35 | சித்60 | வித்தியாரம்பம், எருவிட |
| 14 | 27 | வெ | ஏகா21-10 | ரேவ44-13 | அமி60 | சர்வ, மத்வ, ஏகாதசி |
| 15 | 28 | சனி | து13-35 | அஸ்38-38 | சித்60 | அக்கினிநக்ஷத்திர முடிவு |
| 16 | 29 | ஞா | திர6-3 | பர33-8 | சித்60 | கரிநாள், மாசசிவராத்திரி |
| | | | சது58-50 | | | [கரிநாள் |
| 17 | 30 | திங் | ●52-8 | கி✲28-15 | ம28-15அ | அமாவாசை, கிருத்திகை, |
| 18 | 31 | செவ் | பிர46-43 | ரோ24-8 | அ24-8சி | |
| 19 | 1 | புத | துதி42-28 | மிரு21-18 | சித்60 | |
| 20 | 2 | வியா | திரி39-45 | திரு19-53 | ம19-53அ | |
| 21 | ஜூன் 3 | வெ | சது38-50 | புன20-13 | சி20-13ம | |
| 22 | 4 | சனி | பஞ்39-48 | பூசம்22-18 | சி22-18ம | |
| 23 | 5 | ஞா | சஷ்42-25 | ஆயி26-5 | சித்26-5ம | |
| 24 | 6 | திங் | சப்46-30 | மக31-28 | ம31-28சி | |
| 25 | 7 | செவ் | அ51-43 | பூர37-55 | சி37-55அ | |
| 26 | 8 | புத | நவ57-25 | உத்45-8 | அ45-8ம | |
| 27 | 9 | வியா | தச60 | அஸ்52-25 | சித்60 | |
| 28 | 10 | வெ | தச4-30 | சித்59-28 | சித்60 | நிர்ஜலா ஏகாதசி |
| 29 | 11 | சனி | ஏகா8-38 | சுவா60 | அமி60 | சர்வ மத்வ ஏகாதசி |
| 30 | 12 | ஞா | து13-10 | சுவா5-35 | சி5-35ம | பிரதோஷம் [ஜயந்தி |
| 31 | 13 | திங் | திர16-45 | விசா10-48 | ம10-48சி | மாடுவாங்க, நரஸிம்ம |
| 32 | 14 | செவ் | ச○19-5 | அனு14-53 | சி14-53ம | பௌர்ணமி, வடசாவித் |
| | | | | | | திரி விரதம் |

| | | | |
|---|---|---|---|
| குரு | புத | சூரி | ச-ரா செவ் |
| | 4-ரிஷ-புத<br>12-கட-செவ்<br>18-மிது-புத<br>19-கட-சுக் | | |
| கே | சனி | | |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE " ANANDA BODHINI" POWER PRESS,**
**15, VENKATESA MAISTRY ST., MADRAS.**